# *Ūḻiyaṉ*

*Malar 13, itaḻ 2*

*December 28, 1932*

Record no. 148

சென்னைப் பதிவு எண் க஡௦௯    கஉ பக்கங்கள்    விலை அணா 0-1-6    தந்தி விலாசம்:—"ஊழியன்"

# ஊழியன்.

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ௩—0—0
அறுமாதச் சந்தா ... ௧—௮—0
வெளிநாடு வருடச்சந்தா ... ௪—0—0

விளம்பர விகிதம்.
அங்குலம் க-க்கு வாரம் க-க்கு 0—அ—0
ஸ்திரமான விளம்பரம் அங். உ-க்கு க—0—0
இப்பத்திரிக்கு விளம்பர விகிதத்திற்கு எழுதவும்.

The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க!    அல்லவை ஆழ்க.

மலர். கங.    காரைக்குடி, ஆங்கிரச-௵ மார்கழி-மீ கச-உ புதன்கிழமை.    இதழ் உ

## சிறை வாழ்வு.

இவை வேலூர்ச் சிறையில் (எ—க0—௩உ)ல் ராய. சொக்கலிங்கனால் பாடப்பெற்றவற்றுட் சில.
சிறையின் ஸி. வகுப்பு வாழ்வை இப்பாடல்கள் உள்ளவாறே காட்டுவன.

### எண்சீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

( சென்றவாரத் தொடர்ச்சி. )

மகவுபல ஈன்றுபெரும் புகழ டைந்த மாதாவின் துயர்களைதல் கடனென் றாலும்
தகவுடையாய் சபர்மதியெம் தவமே காந்தித் தண்ணளியே தலைமைநீ தாங்காய் என்னில்
வகைவகையாச் சுவைமிக்க உணவ ருந்தி வாழ்ந்தவுயர் மக்கள்பலர் சிறைக்கூ டத்தில்
மிகவெளிய புளிச்சாற்றில் குழைத்துச் சோற்றை விழுங்கியுயிர் வாழ்ந்திடுதல் உண்டோ உண்டோ. (சு)

சிறைப்பட்ட தாய்நாட்டை மீட்டல் மக்கள் சிறந்தகடன் ஆனாலும் சீரார் காந்தி
... பெரிய அமரொன்றை அறிதிற் கண்டே அதன்தலைமை நீபூணாய் ஆனால் ஐயா
குறிப்பறிந்து பணியாற்ற அருகே காத்துக் கொண்டுநிற்கும் வினையாட்கள் பலரை ஆளும்
பொறுப்புடையார் சிறை நடத்தும் கடமை பூண்ட புன்மனித்தர் கீழிருத்தல் புவியில் உண்டோ. (எ)

முன்னுலகின் முடிமணியாய் மிளிர்ந்த தாயின் மூண்டபிணி போக்கிடுதல் கடனென் றாலும்
தன்னிகர்நீ தலைநின்று நடத்தாய் என்னில் சபர்மதிவாழ் தவமுடைய காந்தி வள்ளால்
மன்னவர்போல் பெருவாழ்வு வாழ்ந்து யர்ந்த மதிநிறைந்த புகழுடைய மக்கள் எல்லாம்
புன்சிறையுட் செயலிழந்து துன்பம் பூண்டு பூட்டறையிற் கிடந்திடுதல் பூவில் உண்டோ. (அ)

அருமையுடை அன்னைக்கு வாழ்வு நல்கல் அறிஞர்கடன் ஆனாலும் அவனிக் கெல்லாம்
பெரியவனென் றுலகுபுகழ் பெரியோய் காந்தி பெருந்தலைமை பெற்றேநீ பிறங்காய் என்னில்
பிரிவறியாக் காதல்புரி துணைபி ரிந்து பெருவாழ்வை அறமறந்து பெரியோர் பல்லோர்
இருளுசிறை எளிமையுடைச் சிறிய வாழ்வை இனிதெனக்கொண் டிடுதெலிந்தத் தலத்திலுண்டோ (கூ)

பொறையுடைய இந்தியத்தாய் துயர்து டைத்தல் புதல்வர்கடன் ஆனாலும் புலவர் போற்றும்
நிறையுடைய நீண்டபுகழ் நேயக் காந்தி நீதலைமை பூண்டுபோர் நிகழ்த்தாய் என்னில்
கறையுடையார் தமக்காகக் காணப் பட்ட காவலமை வறட்டுமலை சூழ்ந்த வேலூர்ச்
சிறையதனில் சிற்றறையில் இருந்து ராய சொக்கலிங்கன் இப்பதிகம் சொல்லல் உண்டோ. (க0)

[சென்ற வாரத்தில் சென்னை கோகலே மண்டபத்தின் எதிரேயுள்ள ஹிந்துஸ்தான் கட்டிடத்தில் சர் பி. சி.ரே. சுதேசி பஜார், சுதேசிக்காட்சி ஆகியவற்றை திறந்து வைக்கும்பொழுது பேசியதன் சாரம்]

# சுதேசியே எனது உயிர்.

(டாக்டர் சர். பி. சி. ராயின் விரிவுரை)

### அந்நியர் அபிநயம் வேண்டாம்.

நான் ஓர் கவியல்ல, ஞான திருஷ்டி வாய்ந்த ரிஷியுமல்ல. கற்பனைக்காரனுமல்ல; ஆனால் நான் கூறுவதை செயலில் காட்டும் தன்மை வாய்ந்தவன். நாம் நமக்குத் தேவையான சாமான்களை உற்பத்தி செய்தாலன்றி சுதேசி சாமான்களையே வாங்கவேண்டுமெனக் கூறுவதற்கு அர்த்தமேயில்லாமல் போய்விடும். நாம் எவ்விஷயத்திலும் ஆங்கில நடையுடை பாவனைகளை அபிநயனம் செய்யக்கூடாது. அவ்விதம் செய்வதால் ஏற்படும் ஆபத்து கொஞ்சமல்ல. கஅ௩௩-ம் வருஷம் மெக்காலே என்பவர் ஓரிடத்தில் கீழ்வருமாறு கூறியுள்ளார். 'இந்தியர்கள் நிறத்தில் மாத்திரம் தான் இந்தியர்களாக இருக்க வேண்டுமேயன்றி தேவை, அபிலாஷை முதலிய விஷயங்களில் நாம் அவர்களை வெள்ளையர்களாகவே செய்துவிட வேண்டும்.' இன்னும் சென்னையில் கூட பலவிடங்களில் மேனாட்டு முறையில் ஓட்டல்கள் முதலியன உற்பத்தியாகி வருவது வருந்தத் தக்கதாகும். கூடுமானவரை ஒவ்வொருவரும் இந்தியாவில் உற்பத்திசெய்த சாமான்களையே உபயோகிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். மிகவும் மிருதுவான, உயர்ந்த உடைகள் நம் தேசத்தில் உற்பத்தியாகும் வரை நாம் முரடான உடைகளையே, கட்டிக்கொள்ள வேண்டுமென விரதம் மேற்கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் பெண்கள்தான் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். பெண்கள் சுதேசி உடைகளைத் தவிர, வேறொன்றையும் அணிந்து கொள்ளுவதில்லையெனத் தீவிரமாக இருப்பார்களானால், மற்றவர்கள் தாங்களாகவே சுதேசி உடைகளையே உடுத்திக்கொள்ள ஆரம்பித்து விடுவார்களென்பதில் சந்தேகமில்லை.

தற்போது ஓர் மாதத்தில் புகையிலைக்காக கஃ லக்ஷமும், சாராய வகைகளுக்காக கஉ லக்ஷமும், பருத்தி நூலுக்காக ஃ லக்ஷம் ரூபாயும், மருந்து வகைகளுக்காக ஃ லக்ஷமும், நாற்காலி முதலிய சாமான்களுக்காக உ லக்ஷம் ரூபாயும், நம் தேசத்திலிருந்து வெளிநாடுகளுக்கு போய்வருகிறது. எனவே ஒவ்வொரு விஷயத்திலும் நாம் சுதேசி சாமான்களையே உபயோகிக்க ஆரம்பித்து நமது பணம் அன்னிய நாட்டிற்குப் போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும். இன்னும், இந்தியாவில் செயற்கைப்பட்டு இறக்குமதி யாவதைத் தடுக்கவேண்டும். அதனால் நமது தேச பட்டுத் தொழிலுக்கும் ஆபத்தேற்பட்டு வருகிறது.

### சுதேசியே எனது உயிர்ச் சக்தி.

சுதேசியே எனது உயிராக இருக்கிறது. இந்தியர்களுக்கு விதேசித் துணிகளை வாங்க எவ்விதம் மனம் வருகிறதென்பது எனக்குத் தெரியவில்லை. நாம் காட்டுமிராண்டிகளல்ல. நமது சௌகரியம் என்னவென்பது நமக்கு நன்கு தெரியும். உதாரணமாக சென்னையை எடுத்துக்கொண்டால், எங்கும் மோட்டார்கார் மயமாகவே இருக்கிறது. ஓர் அன்னியர் சென்னைக்கு வந்து இந்நகரில் செல்லும் மோட்டார்களை கவனிப்பாரானால், இவ்வுலகிலேயே சென்னை நகரமானது செல்வம் செழித்துள்ள ஓரிடமென முடிவு செய்து விடுவார். மேனாட்டினரிடமுள்ள துர்ப்பழக்கங்களைத்தான் நாம் சுவீகாரம் செய்துகொண்டு வருகிறோமே யொழிய அவர்களுடைய நல்ல பழக்கங்களை நாம் கவனிப்பதில்லை. இந்தியாவில் வைசிராயாக இருந்த லார்டு கர்சான் ஓர் சமயம் பேசுகையில், இந்திய மன்னர்கள் இந்தியாவில் உற்பத்தியான கம்பளங்களை வாங்காமல், இங்கிலீஷ் கம்பளங்களை வாங்கியதற்காகக் கடிந்துகொண்டார். சுதேசி சங்கமானது தேசத்திற்கு உயர்ந்த தொண்டுசெய்து வருவது போற்றத்தக்கது. சிறைசெல்லுவதுதான் தேசத் தொண்டுசெய்வதென்ற அர்த்தமில்லை. ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் போன்றவர்கள் சிறை சென்று தேசத் தொண்டு செய்யட்டும். நாமெல்லோரும் வேறுவிதமாக தேசத்தொண்டு செய்வோம். தேசத்திற்காக சிறைக்கே சென்றதில்லையெனினும், என்னால் இயன்றவரை சுதேசி இயக்கம் முன்னேற்றமடைய நான் தொண்டாற்றி வருகிறேன். நம் தேசத்தில் பெரும்பாலோர் பட்டினி கிடந்துவரும் பரிதாபத்தைத் தீர்க்க வேண்டுமானால், சுதேசித் தொழில் அபிவிருத்திதான் சிறந்த முறையாகும்.

### வேலையில்லாக்கஷ்டம்தீருவதெப்படி?

இத் தேசத்தில் சர்வகலாசாலைகள் வர வர அதிகமாகி வருகின்றன. சர்வகலாசாலைகள் வருஷா வருஷம் ஏராளமான பட்டதாரிகளை உற்பத்திசெய்து, அவர்களுக்கு முத்திரை வைத்து அதாவது பட்டங்கட்டி அனுப்பிவிடுகின்றன. ஆனால், அவர்களும் வேலையில்லாக் கஷ்டத்தினால்தான் திண்டாட வேண்டியிருக்கிறது. நமது தேசத்தில் கைத்தொழில்கள் விருத்தியடைந்து, பட்டதாரிகளும் அவ்விஷயத்தில் கவனம் செலுத்துவார்களானால், அவர்கள் கஷ்டம் தீருமென்பதில் சந்தேகமில்லை. கார்பன் பேப்பர்கள் போன்ற அற்ப சாமான்களுக்கு நம் தேசத்திலிருந்து சம லட்சம் ரூபாய் வரை வெளிநாடுகளுக்குப் போகிறது. எனவே, பென்ஸில்கள், கார்பன் பேப்பர்கள் முதலிய சகல சாமான்களையும் நம் தேசத்திலேயே உற்பத்தி செய்ய நாம் தகுந்த முறைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். உண்மையான சுதேசி சாமான்களிருக்குமிடத்தை அறிவிக்க வேண்டியதும் சுதேசி சங்கத்தின் முக்கிய கடமையாகும். இங்குள்ள ஒவ்வொருவரும், சுதேசி சாமான்களைத் தவிர வேறொன்றையும் உபயோகிப்பதில்லையென தங்களுக்குத் தாங்களே பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும்.

அன்னியநாட்டு சாமான்களை நீங்கள் உபயோகித்தால், இந்நாட்டிலுள்ள ஏழைகளின் உணவை அபகரித்தவர்களாவீர்கள். நீங்கள் கத்தரை உடுத்திக் கொண்டால், மறைமுகமாக ஏழைகளுக்கு உதவி செய்தவர்களாக ஆகிறீர்கள். எனவே, இத்தேசத்தின் வறுமை அதிகமாக நாம் எவ்விதத்திலும் காரணமாக இருக்கக் கூடாதெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.





# சுகாதாரப் பகுதி.

## தூயகாற்றின் தேவை.

("சுசீலா.")

நமது பகுதியில் லட்சக்கணக்கான பொருள் செலவு செய்து பெரிய வீடுகள் கட்டப் பட்டிருக்கின்றன. ஆனால் அவை மனிதர் வசிப்பதற்குப் போதுமான வசதியுள்ளதாக வில்லை. ஏனெனில் மனிதவாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத காற்றும் சூரிய வெளிச்சமும் வீட்டினுள் செல்வதில்லை. இதனின்றும் அவர்கள் இவ்விரண்டின் தேவையை அறியவில்லை என்றே நம்ப வேண்டியதிருக்கிறது. ஆதலால், இந்த வாரத்தில் நல்ல காற்று மனிதனுக்கு ஏன் தேவை? அதனால் என்ன நன்மை யடைகிறான் என்பதைப் பற்றி குறிக்கின்றேன்.

ஃ ஃ ஃ

உடம்பைப் பாது காப்பதற்கு நாம் பலவித மருந்துகளைச் சாப்பிடுகிறோம். இங்கிலாந்து முதலிய இடங்களிலிருந்து எத்தனையோ டானிக்குகள் வருகின்றன. நமது நாட்டிலும் மதன தீப ஹல்வாக்கள், மதன காமேஸ்வரி லேகியங்கள், இன்னும் மன்மத பாண குளிகைகள், மாத்திரைகள் முதலியவைகள் இருக்கின்றன. இவற்றின் தொகை ஒவ்வொரு நாளும் பெருகியே வருகின்றது. எந்தப் பத்திரிகையைப் பார்த்தாலும் இவ்வித விளம்பரங்களே இருக்கின்றன.

ஃ ஃ ஃ

இவை எதனைக் குறிக்கின்றது? நாம் இயற்கை வாழ்க்கையை விட்டு விட்டோம்; பல செயற்கைப் பொருட்கள் உதவியின்றி வாழமுடியா திருக்கின்றோம் என்பதல்லவா? நமக்கு கடவுள் ஏராளமான தூய காற்று யளித்துள்ளார். இந்தக் காற்றை உபயோகித்துக் கொள்ளக் கூடாதென எந்த வைதிகர்களும் மறுக்கமுடியாது. எவ்வித சாஸ்திர மூட்டையும் அதனை கட்டுப்படுத்தவு முடியாது. எந்தக் கொடிய அரசாங்கமும் தடை உத்தரவு போட்டுத் தடுக்கவுமுடியாது. அங்கு இங்கு என்னாதபடி எங்கும் நிறைந்திருக்கின்றது காற்று! தீண்டாதவன் என்றோ, தொடக்கூடாதவன் என்றோ வேற்றுமையை நமது காற்று பாராட்டுவதில்லை. பிராமணன்தான் தொடலாம் உயர்ந்த சாதியார்தான் என் பக்கத்தில் வரலாம் என்றும் அது பாவிப்பது இல்லை. அவ்வளவு பெரிய சமதாமக் கொள்கை கொண்டிருக்கிறது வாயு!

ஃ ஃ ஃ

இவ்வாறு தடையின்றி உலகமெங்கும் பாவிக் கிடக்கும் காற்றை எல்லோரும் பருகி சுகவாழ்வு வாழ்ந்து வாருங்கள் என்று கடவுள் கூறுகின்றார். ஆனால், உயர்ந்த சாதியார் என்ற அகந்தை கொண்டவர்களுக்கு அதனையுடைய விருப்பமில்லாதிருக்கிறது. இதன் காரணம் என்ன? தாழ்ந்த சாதியார் தீண்டாதார்—முதலியோர்களெல்லாம்—நம்மோடு சமதத்துவமாகத் தூயகாற்றை சாப்பிட்டுவிட்டால் நமது உயர் தன்மை போய்விடுமே என்ற பயமா? அல்லது அறியாமையா? எதுவாயிருப்பினும் சரி; மனிதன் உடல் நலனோடு இருக்கவேண்டுமானால் நல்ல காற்று வேண்டும். அவ்வளவுதான்!.

ஃ ஃ ஃ

நல்ல காற்றில் ஏராளமான பிராணவாயு அடங்கியிருக்கிறது. ஒருவன் உடலுக்கு இரத்தம் எவ்வாறு அவசியமாக விருக்கிறதோ அவ்வாறே நல்ல காற்றிற்கு பிராணவாயு இன்றியமையாததாக விருக்கிறது.

ஃ ஃ ஃ

தூயகாற்றிலிருக்கும் பிராணவாயுதான் இரத்தத்திற்கு சிவப்பு நிறத்தைக் கொடுக்கிறது. இரத்தம் நல்ல சிவப்பாய் இருந்தால் மட்டுமே உடல் நலன் குன்றாது இருக்கும். மேலும் பிராணவாயு உடலுக்கு வெப்பத்தையும் வலிமையும் கொடுக்கிறது. நாம் உண்ணும் உணவை எலும்பாகவும் தசைகளாகவும் மாற்றுகிறது.

ஃ ஃ ஃ

நாம் வாழும் வீடுகளில் ஜன்னல்கள், பெரிய வாசல்கள் இல்லாதிருந்தால்—நாம் தூங்கும் அறைகளின் கதவுகளைத் திறக்காதிருந்தால்—அவ்வீட்டினுள்—அறையினுள் சுத்த காற்று இருப்பதில்லை. கெட்ட காற்றே தங்குகிறது. மனிதரின் பெரும் எதிரியான கரிமலவாயுதான் அங்கே இருக்கும். இதன் பலன் என்ன? காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்பொழுது உடம்பு மிகவும் சோர்வுற்றிருக்கும். கண்கள் பார்வை மங்கி சுறுசுறுப்பற்று இருக்கும். படுக்கும் அறைகளில் ஏராளமான ஜன்னல்கள் வைத்து பிராணவாயு உள்ளேவர வசதியளித்திருப்பின் கரியமலவாயு அறையினுள் தங்கமுடியாது. நல்ல காற்று உட்கொள்ளுவதால் எழுந்திருக்கும்பொழுது மனமகிழ்ச்சியும் உற்சாகமும் இருக்கும்.

ஃ ஃ ஃ

தூயகாற்று இல்லாத குறையால் சிறுவர்களிடையே கக்குவாய் இருமல், ஸ்கார்லெட்சுரம், முதலிய தொத்துவியாதிகள் தோன்றுகின்றன. இரத்தத்தில் பிராணவாயு குன்றியிருப்பதால் உடம்பில் அசுத்தங்கள் நிரம்பி பலவிதமான நோய்கள் தோன்றுகின்றன. தலைவலி, வயிற்றுக்கோளாறு, தொண்டைநோய் முதலியவற்றின் காரணமும் இதுதான்.

ஃ ஃ ஃ

ஒருவருக்கு சுரமோ அல்லது இதர நோய்களோ தோன்றினால் அந்நோயாளி படுத்திருக்கும் அறையின் ஜன்னல்களை மூடி விடுகிறார்கள். இன்னும் ஏராளமான ஜனங்களும் அவ்வறையினுள் வந்து கூடிவிடுகிறார்கள். இது அவ்வறையிலுள்ள சுத்தகாற்று யாவற்றையும் அசுத்தப்படுத்திக் கரியமலவாயு கொண்டு நிரப்பிவிடுகிறது. சாதாரண காலங்களைவிட நோய்வாய்ப்பட்டிருக்கும்பொழுதுதான் மிகுதியான பிராணவாயு தேவை. இது தேவையானால் நோயாளிபடுத்திருக்கும் அறை சுத்தமாக விருக்கவேண்டும். அதிலுள்ள சன்னல்கள் யாவும் நன்றாகத் திறந்திருக்கவேண்டும். மிகுதியான ஆட்கள் உள்ளேவரக் கூடாது.

ஃ ஃ ஃ

சுத்தகாற்றானது காசநோயை அகற்றுதற்குச்சிறந்த உயர் மருந்தாக விருக்கிறது. எப்பொழுதும் நன்றாக மூச்சை உள்ளே இழுத்து நற்காற்றை உட்கொள்ளுவதானால் சுவாச காசம், நுரை ஈரல் சம்பந்தமான நோய்கள் எதுவும் அணுகா.

ஃ ஃ ஃ

உடற் பயிற்சிகளை ஒழுங்காகச் செய்து வருவதால் மார்பு அகலுகின்றது. ஹிருதயத்திலுள்ள ஒவ்வொரு காற்று பையினுள்ளுக்கும்சுத்தகாற்று செல்கின்றது. ஓஜோன் எனும் பிராணவாயு உள்ளே செல்லுவதால் நோய் எதுவும் அணுகுவதில்லை.

ஃ ஃ ஃ

ஆதலால், பெற்றோர்களும், பெரியோர்களும் தங்கள் குழந்தைகளுக்கு நல்ல காற்றின் தேவையும் அதன் நன்மைகளும் எடுத்துரைத்தல் வேண்டும். கனவான்களும் கட்டிடம் கட்டுவோர்களும் தங்கள் வீடுகளில் ஏராளமான சன்னல்கள் ஏற்படுத்தல் வேண்டும். இருக்கும் சன்னல்களை இரவு தூங்கும்பொழுது திறந்து வைத்து சுத்த காற்று உள்ளே வரச் செய்ய வேண்டும். வீட்டுக்கரசிகளான பெண்மணிகள் நல்ல காற்றின் நலனை அவசியம் அறிதல் வேண்டும். அதனை எடுத்துரைத்தல் ஆடவர்களின்—கற்ற பெண்மணிகளின்—கடனாகும்.

### சினிமாப்படங்கள்

உலகத்திலுள்ள சினிமாக்கம்பெனிகளில் தொகை சுமார் கூஉ ஆயிரமென்று கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது. இவை யாவற்றுள்ளும் நாளொன்றுக்கு இரண்டு கோடி ஜனங்கள் வரை சென்று பார்ப்பதாகத் தெரிகிறது.

அயல் நாட்டார் கலப்பு கூடுமோ?

இங்கிலாந்திலுள்ள பெண்கள் அயல் நாட்டு ஆடவர்களை மணம் செய்து கொள்ளுவதானால் ரிஜிஸ்தர் செய்து கொள்ளவேண்டும் என்ற விதி அந்த தேசத்திலிருக்கிறது. இவ்வாறு செய்யப்படாவிட்டால் ரிஜிஸ்தராகாவிடின் அப்பெண்கள் தண்டிக்கப்படுவார்களாம்.

ஃ ஃ ஃ

பெண் சுதந்தரத்திற்குத் தடை!

இது பெண்கள் சுதந்தரத்திற்கும் ஏதேச்சாதிகாரத்திற்கும் பெருந்தடையாதலால், இதனைக் கண்டிக்கவேண்டுவது அவசியமென்று அங்குள்ள பெண்கள் யாவரும் அபிப்பிராயப்படுகிறார்கள்.

ஃ ஃ ஃ

இங்கிலாந்தில் சட்டமறுப்பு!

கிளாஸ்டரில் ஓர் ஆங்கில மாது அமெரிக்கன் ஒருவனை மணந்துகொண்டாள். இதனைப் பதிவு செய்துகொள்ளாததற்காக அப்பெண்ணுக்கு அபராதம் விதிக்கப்பட்டதாம். இது பெண்கள் சுதந்தரத்தைப் பாதிக்கக் கூடியதாக விருப்பதால் அவர்கள் தங்கள் உரிமையை நிலைநாட்டும் பொருட்டு சட்டத்தை மீற நிச்சயித்துள்ளார்கள். பெண்கள் சுதந்தரச் சங்கத்தின் காரியதரிசி 'அயல்நாட்டினரை மணந்துகொள்ளும் எந்த ஆங்கிலமாதும் ரிஜிஸ்தர் செய்துகொள்ளவோ அபராதம் கொடுக்கவோ கூடாதென்று நாங்கள் வற்புறுத்துவதோடு அவர்கள் அச்சட்டத்தை மீறி சிறைக்குச் செல்லுவதே சிறந்ததென்று கூறுகிறோம். இதுவே இச்சட்டத்தை முடிவு செய்யும்." என்று கூறியுள்ளார், இந்தப் பிரசாரம் நாடுமுழுதும் மும்முரமாக நடைபெறுகிறதாம்.

ஃ ஃ ஃ

வேலி பயிரைத் தின்னுமா?

போலீஸ் இலாகா கொள்ளைகளை ஒழிப்பதற்காக ஏற்பட்டிருக்கிறது. திருட்டுகளை கண்டுபிடிப்பதே அதன் உத்தியோகஸ்தர்களின் கடமை. அநீதியை ஒழிப்பதே அவர்கள் வேலையாகவிருத்தல் வேண்டும். ஆனால் அலகபாதிலிருந்து கிடைத்த ஓர் செய்தியால் இந்த இலாகா உத்தியோகஸ்தரே ஓர் கொள்ளைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்து நடத்தியதாகத் தெரிகிறது. இது வேலியே பயிரைத்தின்ற மாதிரியல்லவா? வேலி பயிரைத் தின்னுமா? அது பயிரைக் காப்பாற்ற வல்லவா ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று சந்தேகப்படுவோர்கள் இனி அவ்வித சந்தேகங் கொள்ள வேண்டுவதில்லை.

ஃ ஃ ஃ

சப் இன்ஸ்பெக்டரே கொள்ளைத் தலைவர்!

உத்தியோகஸ்தர் என்று குறிப்பிட்டேன். அதிலிருந்து போலீஸ் சிபாயும் கான்ஸ்டபிள்களும் உத்தியோகஸ்தர்கள்தானே, பத்து அல்லது பதினைந்து சம்பளம் வாங்கும் அவர்கள் குற்றத்தைப் பெருமையாகக் கருதவேண்டுவதில்லை என்று சிலர் கருதலாம். ஆனால் ஹெட்கான்ஸ்டபிள் கிரேடுக்குக் குறைந்தவர்கள் எவரும் உத்தியோகஸ்தராகக் கருதப்படுவதில்லை. இங்கு குற்றவாளியாக சந்தேகப்பட்டிருப்பவர் ஓர் சப் இன்ஸ்பெக்டர்! அலகபாதிலே அவர் உத்தியோகம் பார்த்து வந்தாராம். இந்த சப் இன்ஸ்பெக்டரே கொள்ளைத்தலைவராக விருந்தார் என்று அவரைத் தற்பொழுது கைது செய்துள்ளார்.

# உருசிகரத் துணுக்குகள்.

இங்கிலாந்தில் பெண்கள் சட்டமறுப்பு—எலிகள் சுயராஜ்யம் பெற்ற நாடு எது? கொள்ளைக் கூட்டத்திற்கு சப் இன்ஸ்பெக்டர் தலைவர்! கடனுக்கு விவாகரத்துச் செய்வது எப்படி?

ஃ ஃ ஃ

மூன்றரை லட்சம் கொள்ளை!

சப் இன்ஸ்பெக்டர் தலைமையிலுள்ள கொள்ளைக்கூட்டம் சென்ற எட்டு ஆண்டுகளில் மூன்றரை லட்ச ரூபாய் பெறுமானமுள்ள பொருள்கள் கொள்ளையடித்திருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. இன்னும் தகவல் கிடையாத பொருளும் ஏராளமாக இருக்கலாம். மொத்தம் கஉ இடங்களில் சூறையாடப்பட்டனவாம். இந்தக் கொள்ளைகள் ஐக்கிய மாகாணங்கள், பீகார், வங்காளம் ஆகிய மூன்று மாகாணங்களில் நடைபெற்றதாகத் தெரிகிறது.

ஃ ஃ ஃ

நவீனக்கொள்ளை.

சென்ற எட்டாண்டுகளாக எவராலும் கண்டுபிடிக்காத முறையில் ஓர் கொள்ளை நடப்பதாயின் அது மிகச் சிறந்த முறையாக விருந்திருக்கவேண்டுமல்லவா? அது எவ்வாறு என்பதைக் கூறுகிறேன். அதாவது ஒரு பெரிய கனவான் வீட்டில் கொள்ளையடிக்க விரும்பினால் அந்த வீட்டின் பக்கத்தில் வேறொரு வீட்டினை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளுவார்கள். பின்னர் மெதுவாக அந்தக் கனவானோடு நட்புக்கொண்டு அவன் தங்களை நம்பும்படியும் செய்துகொள்ளுவார்கள் பின்னர் குறிப்பிட்ட நாள் இரவில் மெதுவாக கன்னம் வைத்து சிலர் அக் கனவான் வீட்டினுள் சென்று கொள்ளையடிப்பார்கள். வேறு சிலர் அந்த வீட்டினுள்ளவர்கள் எவரும் வெளி வாராதபடி காவல் புரிவார்கள். கொள்ளை முடிவுற்றதும் தாங்கள் வசித்து வந்த வீட்டைக் காலிசெய்து விடுவார்கள்.

ஃ ஃ ஃ

காதல் கள்வர்கள்.

காதல் கள்வர்கள் என்ற பெயரால் பண்டைத் தமிழ் நூற்களில் கூறியபடியுள்ள கற்பியல், களவியல் சம்பந்தப்பட்ட விஷயமோ என்று சிலர் சந்தேகிக்கலாம். அவற்றிற்கும் இந்தக் காதல் கள்வர்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இப்பொழுது பலவிதமான வியாபாரங்கள், பணம் சம்பாதிக்கும் முறைகள் இருக்கின்றன அல்லவா? அவ்வழிகளை பின்பற்றுவோரில் சிலரே இந்தக் கள்வர்கள்! இவர்கள் தொழில் இன்னதென்பதை விளக்கிச் சொல்லுகிறேன். மேல் நாட்டில் விவாகரத்துக்கள் மிக அதிகமாகிக் கொண்டு வருகின்றனவல்லவா? இவ்வாறு விவாகரத்துச் செய்துகொள்வது அவ்வளவு இலகுவல்ல. ஒரு பெண்ணுக்கு தன் கணவன் பிடிக்கவில்லையானால் அவன் சம்மதமின்றி விவாகரத்து செய்துகொள்ள முடியாது. அவன் பேரில் ஏதாவது குற்றம் ஸ்தாபித்தே ஆகவேண்டும். இதற்காக இந்த காதல் கள்வர்கள் விவாகரத்து விரும்பும் பெண்ணின் கணவனோடு சேர்ந்து உறவாடுவார்கள். இதனைக்கண்டு சாட்சியம் கூற வேறு ஆட்களும் தயார்செய்து வைக்கப்படும்.

கடனுக்கு விவாகரத்து!

விவாகரத்து செய்துகொள்ளவேண்டும் பெண் வழக்குத் தொடரப் பணமில்லையேஎன்ற கவலையும் வேண்டாம். இதனை ஒழிக்க பாரிசில் ஒரு வக்கீல் விவாகரத்து ஏஜன்ஸி ஏற்படுத்தியுள்ளார். இந்த ஏஜன்ஸியாரிடம் விவாகரத்து விரும்பும் பெண் மனுச்செய்து கொண்டால், உடனே, அவள் புருஷன் மீது வழக்குத் தயார்செய்ய அங்குள்ள பெண்கள் அனுப்பப்படுவார்கள். இவர்கள் அந்த ஆடவர்களோடு சரசஞ் செய்து கொண்டிருக்கும் பொழுது, துப்பறிவோர்கள் அவர்களைப் பிடித்துக் கொள்ளுவார்கள். இந்த வழக்கை ஏஜன்ஸி சொந்தக் காரரான வக்கீல் நடத்துவார். அது சம்பந்தமான ரூபாயை வழக்கு முடிவுற்ற பிறகே பெற்றுக் கொள்ளுவாராம். தற்பொழுது இந்த ஏஜன்ஸி சம்பந்தமான தகவல்களை துப்பறியும் இலாக்கா உத்தியோகஸ்தர்கள் கண்டுபிடித்து வெளியிட்டுள்ளார்கள்.

ஃ ஃ ஃ

எலிகள் சுயராஜ்யம்!

பூனைகள் உள்ள இடங்களில் எலிகளைக் காணுவதில்லை. பூனைகள் இருப்பினும் கூட தற்பொழுது ஒருவகை சுண்டெலிகள், வீடுகளிலுள்ள சாமான்களைத் திருடிச் செல்கின்றன. மனிதர்கள் இருப்பதையும் கவனியாது இந்த சுண்டெலிகள் பட்டப்பகலிலும் விளையாடித் திரிகின்றன. இது நமது ஊரில் நடைபெறுவன.

ஃ ஃ ஃ

பொதுவுடைமையில் எலிகளுக்கு பங்கு

பொதுவுடைமைக் கட்சி பரவியுள்ள ருஷியாவில் இந்த எலிகளும் பூரண சுயராஜ்யம் பெற்றிருக்கின்றன. மனிதர்கள் மட்டுமல்ல ஜந்துக்களும் மனிதர் சொத்துக்களில் பங்கு கொள்ளலாம் என்பதற்கும் இது ஓர் சான்றாகும். எலிகள் அங்குள்ள பயிர்கள் யாவற்றையும் தின்றுவிட்டனவாம். சில பொழுது அவை ஆயிரக்கணக்காக கார்ப்பேதியன் [illegible] புகுந்து ரோடுகளில் உலாவி திரிவதால் மோட்டார்கள் போக்குவரவிற்கே பெரும் இடைஞ்சலாக விருக்கின்றனவாம். அவை ஒன்றாக பாதைகளில் செல்லும் பொழுது சிறிது தூரத்திலிருந்து யாரேனும் [illegible]ர்களானால் ரோடுகளே நகர்ந்து [illegible] போலிருக்குமாம்.

ஃ ஃ ஃ

ரு லட்சம் மனிதர் உணவைத் தின்றன.

இந்த எலிகள் குளிர்காலத்தில் ஐந்து லட்சம் மனிதர்கள் சாப்பிடக்கூடிய உணவைப் பாழாக்கிவிட்டனவாம். எனவே, பஞ்சம் நோதா[illegible] தடுக்க அதிகாரிகள் வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்வரவழைக்க வேண்டியதாயிற்றும்.







## ஆலயப் பிரவேசம்.

நூற்றுக்கு எஎ ஆதரவு.

குருவாயூர் ஆலயப்பிரவேசத்திற்கு சாதக பாதகமாகவுள்ள பொதுஜன ஓட்டுகள் டிசம்பர் உரு-ம தேதி எண்ணப்பட்டது. அதன் விபரம் வருமாறு:—

பொன்னானி தாலுகாவிலேயே இந்த குருவாயூர் கோவில் இருக்கிறது. அதில கஉரு அம்சங்கள் (கிராமங்கள்) இருக்கின்றன. மொத்த விஸ்தீரணம் சரு0 சதுர மைல். மொத்த ஜனத்தொகை சு,உசு,சஎ0. இவர்களுள் ரு,உச,ரு00 பேர்தான் ஹிந்துக்கள். இவர்களுள் தீண்டத்தகாதார், தொடத்தகாதார் என்பவர்களையும் வண்ணார், அம்பட்டர் போன்ற கோவிலுக்குள் அனுமதிக்கப்படாத இதர ஜாதிகளையும் நீக்கி, கோவிலுக்குள் செல்லக்கூடியவர் தொகை சுமார் சுரு,000 இதில் மைனர்களும் உட்பட்டுள்ளார்கள். ஓட்டுகள் கோவில் பிரவேச உரிமையுள்ள வயதுவந்த ஆண் பெண் இருபாலாரிடமே வாங்கப்பட்டிருக்கிறது. இவர்கள் தொகை சுமார் ரு0,000 தான் இருக்கும்.

மொத்தம் உஎசகூ பேர்களிடம் ஓட்டு கேட்கப்பட்டது. இவர்களுள் எரு0உ பேர் ஓட்டுக் கொடுக்க மறுத்து விட்டார்கள். இதன் முக்கிய காரணம் இவர்கள் சாமோரினுக்கு எதிராகப் போகக்கூடாதென்பதேயாகும்.

(க) கோவில் பிரவேசத்திற்கு ஆதரவாக ஓட்டுக்கொடுத்தவர்கள். கரு,ருசுஅ-(அதாவது நூற்றுக்கு எழுபத்தேழு)

(உ) நடுநிலைமை வகித்தவர்கள் உ0கசு (அதாவது நூற்றுக்கு-க0)

(ரு) எதிரிடையாக ஓட்டுக்கொடுத்தவர்கள் உருஎக-அதாவது நூற்றுக்கு கரு. ஓட்டுப்போட மறுத்தவர்கள் யாவரும் எதிர்பாகத்திற்காக ஓட்டுபோட்டதாக வைத்துக் கொண்டாலும் கூட ஆலயப் பிரவேசத்திற்கு எதிர்ப்பு நூற்றுக்கு ருசுதான் ஆகிறது.

பிர்க்காக் கணக்கு விகிதம்.

சாதகமாக ஓட்டுக் கொடுத்தவர்கள்.

| | | |
|---|---|---|
| திரூர் | நூற்றுக்கு | எஎ |
| குட்டிப்புரம் | ,, | அஉ |
| திருத்தலா | ,, | அந |
| அண்டத்தோடு | ,, | அசு |
| சௌகாட் | ,, | சுச |
| நாட்டிகா | ,, | சுரு |

மாணவர்கள் ஆதரவு.

காசி, திருவனந்தபுரம், திருச்சி, சென்னை முதலிய இந்தியாவின் பல பாகங்களிலுமுள்ள மாணவர்கள் ஹரிஜனங்களுக்கு குருவாயூர்கோவிலைத் திறந்துவிடும்படி சாமோரினுக்குத் தந்தியனுப்பியுள்ளார்கள்.

மைசூர் சட்டசபை ஆதரவு.

மைசூர் சட்டசபையில் டிசம்பர் உ0 தேதியன்று ஹரிஜனங்களுக்கு ஹிந்து ஆலயங்கள் யாவற்றையும் திறந்துவிட வேண்டும் என்னும் தீர்மானம் திரு. பேலூர் சீனிவாச ஐயங்காரால் கொண்டுவரப்பட்டது. அதற்கு அரசாங்க இரண்டவது மெம்பர் எஸ். பி. ராஜகோபாலாசாரி பதில் கூறுகையில் அரசாங்கம் இது விஷயத்தில் மிகவும் அனுதாபம்காட்டுவது உண்மையானாலும் பொதுஜன ஆதரவு இதற்கு இல்லாவிடில் வெற்றி பெறமுடியாது என்றும் ஆதலால் அரசாங்கம் இத்தீர்மானத்தில் கலந்துகொள்ள முடியாதென்றும் கூறினர். பின்னர் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபொழுது அரசாங்க மெம்பர்கள் யாவரும் நடுநிலை வகித்தார்கள். உத்தியோகப்பற்றற்றோர் அனைவரும் அதற்குச் சாதகமாக வாக்களித்ததால் தீர்மானம் நிறைவேறியது.

## ஹரிஜன ஊழியம்

நடிகர் சங்கத்தார் உதவி.

மதுரையில் தமிழ்நடிகர் "ஹரிஜனசேவா தளம்" என்ற பெயரால் ஓர் சங்கம் பிரபல நடிகரான திரு. விஸ்வநாத தாஸ் அவர்கள் தலைமையில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இச்சங்கத்தார் டிசம்பர்மீ ரூசு-ம் தேதியை எல்லா நடிகர்களும் நாடக சபைகளும் ஓர் புண்ணிய தினமாகக் கொண்டாடி அன்று கிடைக்கின்ற பொருளை தீண்டாமை விலக்கு நிதிக்கு அளிக்கவேண்டுமென ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார்கள்.

அவதூத ஸ்வாமியின் அவதி!

தெலுங்கு ஜில்லாவிலுள்ள வங்கம் எனும் ஊரில் அவதூத சுவாமி என்று ஒருவர் இருக்கிறாராம். இவர் மகாத்மா காந்தி தீண்டாமை ஒழிக்க விரதம் கொண்டுள்ளதைக் கேட்டுத் திடுக்கிட்டு மதம் பாழாகிவிடும் என்று அஞ்சினாராம். சநாதன பிராமணனுக்கு நான்கு தீட்சைகள் உண்டு. அவற்றுள் ஒன்று தாங்கள் எண்ணிய கருமம் கைகூடும் வரை உண்ணாவிரதமிருந்து மடிதல். இதன்படி நமது அவதூதர் டிசம்பர் முதல் தேதி நண்பகல் உண்ணாவிரதமிருக்க ஆரம்பித்தார். ஆனால் அவரை எவரும் கவனிக்கவில்லை. அவர் உண்ணாவிரதம் எவ்வித உணர்ச்சியும் உண்டுபண்ணவுமில்லை. ஆதலால், அவர் டிசம்பர் அரு-ந்தேதி முதல் விரதத்தைவிட்டு விட்டாராம்.

திறந்த கோவில் மூடிற்று!

ஆலப்புழையில் திரு. கோவிந்தராஜுலு ரெட்டியார், ரெங்கசாமி ரெட்டியார் ஆகியோருக்குச் சொந்தமான ஸ்ரீ வெங்கடாசலபதி கோவில் அகில இந்தியா தீண்டாமை விலக்குத் தினத்தன்று ஸ்ரீ உருமிளாதேவி, தேசபக்தர் கொண்ட வெங்கடப்பய்யா ஆகியோர் முன்னிலையில் ஹரிஜனங்களுக்காகத் திறந்து வைக்கப்பட்டது. ஆனால் அன்று மாலை கோவில் மூடப்பட்டுவிட்டது. காரணம் விசாரித்ததில் அந்தக் கோவில் அர்ச்சகரை ஹரிஜனங்கள் உள்ளேவந்தபின்னரும் பூஜைசெய்வாராயின் ஜாதிப்பிரஷ்டம் செய்வதாக அவர் ஜாதியார் பயமுறுத்தினார்களாம். எனவே அவர் பூஜைசெய்ய மறுத்து விட்டாராம். கோவிலும் மூடப்பட்டு கிடக்கிறது.

கொழும்பு சத்தியாக்ரகம்.

கொழும்பு செல்வ விநாயகர் கோவில் முன் சில தொண்டர்கள் சத்தியாக்கிரகம் செய்துவரும் விஷயம் சென்றவாரம் வெளியானது நண்பர்களுக்கு நினைவிருக்கலாம். அந்த சத்தியாக்கிரகிகளில் நால்வரை போலீசார் கைதுசெய்தனர். இவர்களுக்கு தலா ஒரு வாரம் தண்டனை விதிக்கப்பட்டது.

கோவில்ப் பிரவேச ஆதரவு.

இலங்கையிலுள்ள ஹிந்து கோவில்கள் யாவற்றையும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டுமென்று ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இத் தீர்மானம் நிறைவேறிய கூட்டத்திற்கு தீண்டாதாருக்கு ஆலயப்பிரவேசம் மறுத்த ஓர் கோவில் டிரஸ்டியின் மகனே தலைமை வகித்தாராம்.

சுவருக்கீரை!

"சுவருக் கீரையை எடுத்துப் போடடி சுரணைகெட்ட வெள்ளாட்டி" என்ற ஒரு பழமொழி உண்டு. இது எல்லாரும் அறிந்ததே. இதனை ஸ்ரீரங்கத்திலுள்ள புரோகிதர்கள் சமீபத்தில் செயலில் காட்டிவிட்டார்கள். ஸ்ரீரங்கத்தில் இளையாழ்வார் என்ற காங்கரஸ் அன்பரின் தாயார் இறந்துவிட்டார். சென்ற தீண்டாமை விலக்குத் தினத்தன்று திரு இளையாழ்வார் இதர ஜனங்களோடு பறச்சேரிகளுக்குச் சென்று பிரசங்கம் செய்து ஹரிஜனங்களை சமத்துவமாக நடத்தவேண்டும் என்று சொன்னாராம். இம்மாபெரும் பாதகத்திற்காக புரோகிதர்கள் அவர் தாயாரின் தகனக்கிரியைகளை நடத்தமுடியாதென்று மறுத்தனராம். இதனை அறிந்து திருச்சியிலிருந்து டாக்டர் ராஜன் முதலிய அபிமானிகள் ஏராளமாகச் சென்று ஸ்ரீரங்கம் புரோகிதர்கள் வராவிடின் திருச்சியிலிருந்து வேறு நல்ல புரோகிதரைக் கொண்டுவந்து நடத்துவதாகச் சொன்னார்களாம். திரு இளையாழ்வார் கட்சி பலமாக விருப்பதைக்கண்டு ஸ்ரீரங்கம் வைதிகர் தங்கள் பருப்பு வேகாதென முடிவு செய்தார்கள். பின்னர் வலிந்து தாமே கிரியைகளைச் செய்துவைப்பதாகவும் ஒப்புக்கொண்டு நடத்திவைத்தார்களாம். ஏன் இந்த வைதீகர்கள் சுவருக்கீரையை வழித்துத் தின்னவேண்டும்?

## அடிகள் உண்ணாவிரதம்.

உ-ம் தேதி ஆரம்பமாகாதாம்.

தீண்டாமை விலக்கு சம்பந்தமாக மலையாளத்தில் சுற்றுப்பிரயாணம் செய்துவரும் சர் லாலுபாய் சமல் தாஸ் அசோசியேடட் பிரஸ் நிருபரிடத்தில் சமீபத்தில் கூறியதிலிருந்து மகாத்மா காந்தியடிகள் ஜனவரி உ-ம் தேதி உண்ணாவிரதம் ஆரம்பிக்கமாட்டார் என்று தெரிகிறது. அப்பொழுது அவர் கூறியதாவது:—"காந்தியடிகள், திரு. கேலப்பன் உண்ணாவிரதம் ஆரம்பிக்குமுன் ஆரம்பிக்கமாட்டார். டாக்டர் சுப்பராயன் சென்னை சட்டசபையில் கொண்டுவரவிருக்கும் மசோதாவின் பலனை அறியுமுன்னர் திரு. கேலப்பன் உண்ணாவிரதம் ஆரம்பிக்க மாட்டார். மசோதாவை சட்டசபையில் கொண்டுவருவதற்கு வைசிராய் அனுமதி பெற்று ஒரு கவர்னரால் அது நிறைவேற்றிய பின்னரே துன்பம் ஆரம்பமாகுமாம். அது நிறைவேறிய பின்னர் சாமோரினுடைய நடத்தையைப் பொறுத்தே உண்ணாவிரதம் ஆரம்பிக்கப்படும்.

திரு கேலப்பனின் ஏரவாடாபயணம்.

திரு. கேலப்பன் மகாத்மா காந்தியைச் சந்திக்கும் பொருட்டு சென்னை சென்று அங்கிருந்து பூனாவிற்குப் பிரயாணமானார்.

முனிசிபல் ஜில்லாபோர்டு மெம்பர் ஆதரவு.

மலபார் ஜில்லாபோர்டு, கல்லிக்கோட்டை முனிசிபல் சபை ஆகியவற்றின் ககூ-ஜாதி ஹிந்துக்களான மெம்பர்கள் குருவாயூர் கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடலாமென்று அறிவித்துள்ளார்களாம். இவர்களுள் பிராமணர்கள், நாயர்கள், ராஜகுடும்பத்தினர், நம்பூதிரிகள் முதலிய பல உயர்வகுப்பு கனவான்கள் உட்பட்டுள்ளார்கள்.

ஒருநாள் மட்டும் போகலாம்.

குருவாயூர் கோவிலில் கார்த்திகை ஏகாதசிதோறும் ஹரிஜனங்கள் உட்பட்ட அவர்ண இந்துக்கள் எல்லோரும் செல்லலாம் என்ற வழக்கமிருந்து வருகிறதாம். இவ்வழக்கப்படி சென்ற ஏகாதசியன்று தாழ்ந்த சாதி ஹிந்துக்கள் யாவரும் அனுமதிக்கப்பட்டார்களாம்; அப்பொழுது வழக்கப்படி பூஜையாவும் ஒழுங்காக நடைபெற்றதாம். ஆனால் சில ஈழவ சகோதரர்கள் எல்லா தினங்களினும் தங்களை அனுமதிப்பது வரை கோவிலினுள் செல்லக்கூடாதென மறியல் செய்தார்களாம்.

திருவாங்கூர் சட்ட மெம்பர்கள்.

திருவாங்கூர் சட்டசபையில் உஅ ஹிந்து மெம்பர்கள் இருக்கிறார்கள். இவர்களுள் மூவர் தவிர ஏனையோர் அனைவரும் சட்டசபைத் தலைவர் மூலம் ஓர் அறிக்கையை மகாராஜாவிற்கு அனுப்பியுள்ளார். அதில் அவர்கள் திருவாங்கூர் மகாராஜாவின் ஆட்சிக்குட்பட்ட எல்லா ஆலயங்களையும் மகாராஜாவின் எல்லா ஹிந்துகுடிகளும் வணங்கும்படி திறந்து விடவேண்டுமென்றும் அவ்வாறு செய்து எல்லா ஹிந்துக் குடிகளின் நன்றியைப் பெறவேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

# ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் நீங்கும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா வல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி.
ஆங்கீரஸ௵ மார்கழி௴ ௧௪௳

## கோவில் நுழைவு.



கோவில் நுழைவு நாட்டு மக்கள் அனைவர்க்கும் பொதுவாக இருத்தல் வேண்டும் என்பதுபற்றி இந்நாள் நாட்டில் எல்லாப் பகுதிகளினும் நடைபெறும் பெருங் கிளர்ச்சியை அனைவரும் அறிவர். உலகத்து மக்களாகப் பிறந்தவருள் பிறப்புப்பற்றிப் பொதுக் காரியங்களில் வேறுபாடு இம்மியும் கருதலாகாது என்ற உயர் கொள்கையை அடிப்படையாகக் கொண்டே இவ்வியக்கம் எழுந்திருக்கிறது. இக் கிளர்ச்சி நியாயம் என்பதையும் இக் கிளர்ச்சிக்குக் காரணமாய பழைய பழக்க வழக்கங்கள் உடைத்தெறிய வேண்டியவை என்பதையும் பண்டைச் சவடிகட்கே அடிமைப்படுதல் என்ற பாழான நிலைமையை விடுத்துப் பகுத்தறிவை ஆளும் எவரும் மறுக்க மாட்டார்.

பிறந்த ஒன்றுமட்டும் காரணமாக ஒரு பெருங் குழுவினர் ஆலயத்தொழலாகாது என்று மறுக்கப்படுவது பொறுக்கமுடியாத அநியாயமேயாகும். "கோவில்களில் கடவுள் இருப்பது மெய்; அக்கடவுளை ஆண்டுப்போந்து வணங்குவோர் நன்மை பெறுதல் உறுதி; அக்கடவுளிடத்து மக்களனைவரையும் அன்புடையாராகச் செய்து மக்கள் கூட்டத்தை உயர்த்துதல் வேண்டும்" என்று இறைவன் அடியார் உண்மையிற் கருதுவாரானால் அவர் செய்ய வேண்டுவதென்னை? அத்தகைய இறைவனடியார் கடன் இன்று சந்தேகமற்றதாக விருக்கிறது; எவர் கடவுளைத் தொழ ஆர்வத்தோடு வருகின்றாரோ அவரைப் போன்போடு ஏற்று ஆலயத்துள் அழைத்துச் சென்று வணக்கங்கொடுத்து மகிழ்வப்பதைத் தவிர வேறு கடமையும் உண்டோ?

ஆதித்திராவிடர் முதலான ஒடுக்கப்பட்ட சகோதரர் ஆலயங்களுள் போதல் கூடாது என்று இயம்பும் அன்பர்கள் கொஞ்சம் சாவதானமாக நடுநின்று ஆராய்ந்து பார்ப்பார்களானால் அவர்கள் கருத்தை மாற்றிக் கொள்வார்கள் என நிச்சயமாக நம்புகிறோம். அவருள் அநேகர் பழங் கருத்தை விடுத்து மாறிவருவதையும் ஆங்காங்குக் காண்கின்றோம். இதன் உண்மை காண்பது மிக எளிது. கொஞ்சம் அறிவை ஒருமுகப்படுத்தி ஆராயமட்டும் தொடங்கல் வேண்டும். அவ்வளவு தான்.

ஒடுக்கப்பட்டோர் ஆலயஞ் செல்தல் பழமைக்கு விரோதம் என்பதைத் தவிர அது தகாச் செயல் என்பதற்கு அறிவுக்குப் பொருந்திய காரணம் எதுவும் கோவில் நுழைவை மறுக்கும் எவரும் கூறக் கேட்கின்றோமில்லை. பழமையை மட்டும் பிடித்துக்கொண்டு அறத்திற்கு மாறான வினையாற்றல் அறிவுடைமையன்று என்பது உலகறிஞர் பலரும் ஒப்ப முடிந்த ஒன்று. சாதாரணமாக அறிவை ஆளாமல் சிலர் "பறையர்கள் கோவிலுக்குள் போவதா! ஐயோ! கெட்டுப்போச்சே" என்று கூறுகின்றனர். அவர்கள் கோவிலுக்குள் போவதால் என்ன கெட்டுப் போய்விடும்? அதனால் யாருக்கு என்ன நட்டம்? ஒன்றுமில்லை; வீணாக வாயில் வந்ததைக் கூறுகின்றனர்.

இறையடியார்கள்—இறையைக் கோவிலுக்குள் நிர்மாணிக்கப்பட்ட சிலையுள் மெய்யாகவே கடவுளாகக் காணும் சிவனடியார், அல்லது திருமாலடியார், அன்றி முருகனடியார், அல்லாமல் தேவியடியார் செய்ய வேண்டுவதென்னை? தங்கள் தங்கள் கூட்டத்தைப் பெருக்குதலல்லவா முதற் பெருங் கடமை. கோவிலுக்குள் நுழைய விரும்பாதவரையும் வற்புறுத்தித் தங்கள் தங்கள் கோவில்களின் உண்மைகளையும் தெய்வங்களின் திண்மைகளையும் எடுத்துக் காட்டி வருந்தி அழைப்பதல்லவா இறைபிடம் பக்தி காட்டுவதாகும்.

அவ் உண்மைக்கு மாறாக கடவுளடியார்களே கோவில் வணக்கத்தினால் மேம்பாடடையலாம் என்று கருதிப் போவலோடு வரும் மக்களைக் "கோவிலுக்குள் நுழையாதே! வெளியே நில்!!" என்று தடுத்தல் பொருத்தமானதா என்று காய்தல் உவத்தல் இன்றி, ஆத்திரத்தை விடுத்துத் தனியாக இருந்து ஆராயுமாறு தாழ்மையோடு வேண்டிக்கொள்ளுகிறோம்.

எவர் கடவுள் கோவிலில் உண்டு என்று நம்புகின்றாரோ அவர் ஆலயத்துள் நுழைவதில் எவ்விதச் சிறுதடையும் இருத்தல் தகாது. எந்த வகுப்பானால் என்ன? கோவிலடியார் பிறப்புப்பற்றிய வகுப்பை நோக்குதல் கொஞ்சமும் அறிவுடைமையாகாது. எந்த வகுப்பாரானாலும் கோவிலிலிருக்கும் கடவுளிடம் அன்பில்லாதவரைக் கோவிலுக்குள் விட வேண்டுவதில்லை; அது நியாயம்! அவர் கோவிலுக்குள் நுழைய விரும்பவும் மாட்டார். கோவிலுக்குள் கடவுள் உண்டு என்று நம்பி ஆண்டுப் போந்து தொழ வேண்டும் என்று விரும்புவோர் எந்த சாதியானால் என்ன? அவரை உள்ளே விட்டே தீரல் வேண்டும்; அதுதான் நியாயம்! பண்டைப் பெரியார்கள் கொண்ட கருத்தும் அதுவே.

கோவில் வணக்கத்தையே முக்கியமாகக் கொண்ட அப்பர் சுவாமிகள், ஆழ்வார்கள் முதலிய பெரியோ ரெல்லாரும் அவ்வாறே அருளினர். "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பாரில் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே" என்ற அருளுரையின் பொருளை என் அனுபவத்தில் கொணர அஞ்சுதல் வேண்டும்? இன்னோன்ன பல அன்ன பெரியோர் அருளியவை அவர்களைப் பின்பற்றுவதாகச் சொல்லிக்கொண்டு அவருரைகளைப் புறக்கணித்தல் அழகாமோ?

எவர் இறைவனுடைய பக்தர்களைப் பெருக்கக் கடமைப்பட்டவரோ அவரே அதனைச் செய்யாததோடு அதற்கு முற்றும் மாறான காரியத்தைச் செய்வதையொக்கும்; கோவில் பக்தர், கோவில் கும்பிட வருவோரைத் தடுக்குஞ் செயல் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? எனவே அன்பர்கள் இப்பொருளிற் கருத்தைச் செலுத்தி கோவில் நுழைவிற்குப் பெருந்துணை புரியுமாறு வேண்டுகிறோம்.

## இடிமுழக்கம்.

### ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு.

அலகபாதில் நடைபெற்ற ஒற்றுமை மகாநாட்டில் பண்டித மாளவியாஜி "இம்மகாநாடானது நாம் நமது வீட்டின் ஏஜமானர்களாக விருக்க விரும்புகிறோமா அல்லது நிரந்தர, அடிமைகளாக நமது வீட்டினுள்ளேயே இருக்கப்போகிறோமா என்பதை முடிவு செய்யும்" என்று கூறினர். சமீபத்தில் அலகபாதில் கூடிய மகாநாடு "நாம் ஏஜமானர்களாகவே இருக்கப்போகிறோம்; அவ்வாறே இருக்கவிரும்புகிறோம்" என்பதைத் தினையளவும் சந்தேகமின்றித் தெளிவுறுத்தி விட்டது. இதுகாறும் கூடிய மகாநாடுகளில் தற்பொழுது நடைபெற்ற தானது முழுப் பிரதிநிதித்துவம் அடங்கிய தாகவிருந்தது. இப்பெரும் பிரதிநிதிக் கூட்டத்தில் மிகச்சிக்கலான பலபல வேறுபாடுகளை உண்டுபண்ணிக் கொண்டிருந்த, வேற்றுமையாவும் அகற்றப்பட்டு ஒற்றுமை நிலைநாட்டப்பட்டு விட்டது. இன்னும் வங்காளம் அசாம்சபைகளில் பிரதிநிதித்துவம்பற்றிய சிறிய தகராறுகளே இருக்கின்றன. நாட்டுப்பற்று மிகுந்த வங்கவாசிகள் இவற்றை முடிவுசெய்ய இணங்கிவருவார்கள் என்பது உறுதி. எனவே, இன்னும் எஞ்சி நிற்கும் விஷயங்களிலும் சமாச முடிவு ஏற்பட்டு "ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு" என்பதை ஒற்றுமை மகாநாட்டுப் பிரதிநிதிகள் நிலைநாட்டுவார்களாக.

## 'காங்கரஸ் ஒத்துழைப்பு தேவை'

### சர் சாப்ருவின் பிரசங்கம்.

வட்டமேஜை மகாநாட்டின் இறுதிப்பொழுதில் சர் தேஜ்பகதூர் சாப்ரூ அவர்கள் ஓர் உணர்ச்சியோடு கூடிய விரிவுரை நிகழ்த்தினர். அப்பொழுது காங்கரஸ் ஸ்தாபனத்தின் ஒத்துழைப்பும்—மகாத்மா காந்தியடிகள் முதலிய அரசியல் கைதிகள் விடுதலை செய்யவேண்டுவதன் அவசியத்தையும் வற்புறுத்திப் பேசியதன்சாரம் வருமாறு:-

காங்கிரஸின் ஒத்துழைப்பு-

எவ்வளவு சிறந்த அரசியல் திட்டத்தைத் தயாரித்தாலும் இந்தியா அதை ஏற்க வேண்டியது அவசியமாகும். காங்கிரஸ்காரர்களை ஒப்புக்கொள்ளும்படியாகச் செய்யாவிட்டால் தேசத்தில் அத்திட்டத்துக்கு வரவேற்பு மிகவும் குறைவாகவிருக்கும். நான் காங்கிரஸ்காரர்கள் கொள்கையை ஒப்புக்கொள்ளா விட்டாலும் மகாத்மாஜீ, இந்தியாவின் சிறந்த தேசபக்தி யுணர்ச்சியையும், சுயமதிப்பையும் ஒன்றுகிரட்டி, உருவெடுத்திருக்கிறார் என்று கூறுவேன். இந்தியாவில் தற்காலமுள்ள நிலைமையை நீடிக்கும்படியாக விடக்கூடாது. அப்படிச் செய்தால் தேச அபவாதத்துக் கிடையே மிகவும் கஷ்டத்துடன் தயாரிக்கப்பட்டிருக்கும் அரசியல் திட்டம் ஆபத்துக்குள்ளாகி, வெறுப்புக் கிடங்கொடுக்கும். காங்கிரஸ்காரர்கள் சட்டத்துக் கப்பாலுள்ளவர்களல்ல. அவர்களை அவ்விதம் நடத்தக்கூடாது. அரசியல் திட்டத்தை நடப்பிப்பதற்காக நாம் அதைப்பற்றி யாருடன் கலந்தாலோசிக்கக் கூடும்? மகாத்மாஜீ ஜெயிலிலிருக்கும் வரையில் எவ்வித ராஜீயப் பிரச்னை விவாதத்தையும் நடத்த அவர் மறுத்துவிடுவார் என்பது நிச்சயம்.

அரசியல் கைதிகளை விடுதலை செய்க.

கவர்ன்மெண்டார் கூறுகிறபடி இந்திய நிலைமை அபிவிருத்தியடைந்திருக்குமாகில், ௧௫000 அல்லது ௧௬000 பேர்களை ஜெயிலில் வைத்துக் கொண்டிருப்பது மூலம் அரசியல் முறையில் ராஜீய விவாதங்களை நடத்துவதற்கு அவர்கள் இடங்கொடுக்கிறார்கள் என்று நம்புகிறார்களா? அல்லது அரசியல் திட்டம் இந்தியாவில் வரவேற்கப்படுமென்று நம்புகிறார்களா? இவர்கள் அனுசரிக்கும் முறை முற்றிலும் தவறாகவிருக்கலாம். இருந்தபோதிலும் அவர்களுடைய அபிப்பிராயங்களையொட்டி அவர்கள் சிறைக்குச் சென்றிருக்கிறார்கள் என்பதை மறந்துவிடக் கூடாது.

இந்த நிலைமையை நீங்கள் நன்கு பரிசீலனை செய்யவேண்டுமென்று நான் மிகவும் வருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். எனது ௩0 வருஷ ராஜீய அனுபவத்தில் சென்ற சில மாதங்களாக ஒவ்வொரு இந்தியக் குடும்பத்திலுமிருக்கும் வெறுப்பும் மனோபாவமும் எக்காலத்திலு மிருந்த தில்லையென்று நான் கூறுவேன்."

லார்டு சாங்கி உரை.

வட்டமேஜை மகாநாட்டை முடிக்குங்கால் தலைவர் லார்டு சாங்கி இங்கிலாந்திலுள்ள தொழிற்கட்சியும், இந்தியாவிலுள்ள பெரிய கட்சியாகிய காங்கிரஸ்காரர்களும் கலந்து கொள்ளாததற்கு மிகவும் வருந்துவதாகக் கூறினர். ஆனல், இந்தியாவின் சமஷ்டி அமைப்புப்பற்றிய மசோதா ஆலோசனைக்கு வரும்பொழுது இவ்விரு பெரும் கட்சிகளும் கலந்துகொள்ளும் என்று நம்புவதாகவும் கூறினர்.



## வட்டமேஜை மகாநாடு கடைசிக் கூட்டம்.

இந்தியா வட்டமேஜை மகாநாடு டிசம்பர் ௨௪-ம் தேதி லார்டு சாங்கியின் தலைமையில் கூடி முடிவுற்றது. அப்பொழுது மன்னரின் செய்தி ஒன்று வாசிக்கப்பட்டது. பின்னர் இந்திய மந்திரி சர் சாமுவல்ஹோர் அரசாங்கத்தின் கொள்கையை விளக்கி விரிவுரை நிகழ்த்தினர். கடைசிக் கூட்டத்தில் இந்தியப் பிரதிநிதிகளில் சர் சாப்ரு, சரிலா ராஜா, சர் அக்பர்ஹைதாரி, திரு சர்தார் தாராசிங், சர் மனுபாய் மேத்தா, ஆகாகான் முதலியோரும் பிரிட்டிஷ் பிரதிநிதிகளில் லார்டு ரீடிங், லார்டுபீல், ஆகியோரும் பேசினார்கள்.

கடைசியாக ஐந்து வாரக் கடும் வேலைகளுக்குப் பிறகு வட்டமேஜை மகாநாடு முடிவுற்றது. பொருளாதாரம், ராணுவம், ஆகிய விஷயங்களில் பிரதிநிதிகளுக்குள் பெரும் வேற்றுமை ஏற்பட்டது. இனி ஜாயிண்ட் செலக்ட் கமிட்டி தயார் செய்யும் ஐக்கிய அரசியலமைப்பு சம்பந்தமான மசோதா பார்லிமெண்டில் கொண்டுவரப் படும்.

இந்தியா மந்திரி சர் சாமுவேல்ஹோர் அரசாங்கத்தார் கொள்கையை விளக்கி வட்டமேஜை மகாநாட்டின் முடிவில் பேசியதன் சாரம் வருமாறு:—

### மகாநாடு என்ன செய்தது?

இந்த மகாநாடு செய்ததென்ன தென்னவென்பதைக் குறிப்பிடுகிறேன். இதன் பலனை இரண்டு வாக்கியங்களில் அடக்கி விடலாம். முதலாவதாக, புதிய அரசியலை எவ்வித அஸ்திவாரத்தின் மேல் கட்ட வேண்டுமென்பதை நாம் ஒரு வரையறைக் குட்படுத்தி விட்டோம். சென்ற இரண்டு வருஷங்களிலும் செய்திருந்ததை விட சமஷ்டியின் பல உறுப்புகளின் ஜோலிகள் என்னென்னவென்பதையும் நாம் நிர்த்தாரணம் செய்து விட்டோம்.

### சமஷ்டியும் சமஸ்தானங்களும்.

சமஷ்டியில் இந்திய சமஸ்தானங்களுக்கும் எங்களுக்கும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கைகளுக்கு எவ்விதப் பாதகமுமேற்படாதென்பதை அவர்களுக்குத் தெளிவுபடுத்தி விட்டோம். சர்வாதிகார பீடத்திற்குட்பட்ட விஷயங்கள் சமஸ்டி அரசியலுக்குள் எவ்விதத்திலும் வரப்போவதில்லை.

சட்டசபைகளில் ஸ்தானங்கள் பிரிவினை பற்றி மன்னர்களுக்குள்ளும் பிரிட்டிஷ் இந்தியா குடிகளுக்குள்ளும் பெரும் அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. இவை சம்பந்தமாக நாங்கள் ஒரு முடிவுக்கு வர வேண்டியதிருக்கிறது. பொருளாதார சம்பந்தமாகவும் இன்னும் சமரசம் செய்ய வேண்டிய விஷயங்கள் இருக்கின்றன.

### முஸ்லீம் பிரதிநிதித்துவம்.

பிரிட்டிஷ் இந்தியாவில் மொத்த ஸ்தானங்களில் மூன்றில் ஒன்று முஸ்லீம்களுக்குக் கொடுக்க வேண்டுமென நான் அடிக்கடி கூறியதுண்டு.

### தேதி குறிப்பிடாததற்குக் காரணம்.

அரசியல் இயந்திரமானது மிகவும் சிக்கலானதாகவிருக்கும். ஒரு குறிப்பிட்ட தேதியில் இதை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று பார்லிமெண்டுக்குச் சொல்வதாயின் அது எச்சரிக்கையாக காலத்தைத் தள்ளிப்போட விரும்பும். ஆகையால் தேதி குறிப்பிடாமலிருப்பதே நலம். சமஷ்டியை ஏற்படுத்துவதில்இருந்துவரும் இடையூறுகளை நிவர்த்தி செய்து கொள்ள எங்களாலியன்ற எல்லா முயற்சிகளையும் செய்து கூடிய சீக்கிரத்தில் அவைகளை அகற்றப் போகிறோமென்று நான் சர் தேஜ் பகதூர் சாப்ருவுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். சமஷ்டி ஏற்படுவது ஒரு நிலையில்லாத நிலைமையில் எவ்வித மாகாண சுயாட்சியையும் நாங்கள் ஏற்படுத்தப் போவதில்லை யென்பதையும் நான் அவருக்கு அறிவித்துக் கொள்ளுகிறேன்.

### செல்வத்துறையில் பாதுகாப்புகள்.

சிந்து, ஒரிசா தனி மாகாணமாகவிருக்கும் என்பதைக் குறிப்பிட்ட பின் பாதுகாப்பு விஷயமாகப் பேசினர் அப்பொழுது அவர் குறிப்பிட்டதாவது :—செல்வத்துறையில் அதிகாரத்தை மாற்றுதவரை உண்மையில் அதிகாரத்தை மாற்றியதாகாதென்பதை சென்ற ஒரு வருஷ காலமாக பிரிட்டிஷ்

## இந்தியா மந்திரி பிரசங்கம்.

### சமஷ்டி அமைப்புத் தேதி குறிப்பிடாதற்குச் சமாதானம்,

கவர்மெண்டார் ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள்.

ஆசியாவும், ஐரோப்பாவும் செல்வத்துறையில் மிகுந்த சங்கடமான நிலைமையில் இப்பொழுது இருந்து வருகின்றன. இந்தியாவைப் பொறுத்த மட்டில் இந்தியா மந்திரியின் பொறுப்பின் பேரில் வாங்கப்பட்டுள்ள பல குறுகிய காலக் கடன்களை இன்னும் 6 வருஷங்களுக்குள் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் சமஷ்டியானது நல்ல பெயருடன் ஆரம்பமாக வேண்டுமானால், கடனிறுக்க அது சக்தியுடையதென்ற நம்பிக்கை ஏற்படவேண்டுமானல், இந்தியாவின் நாணயத்திற்குக் குந்தகமின்றி கடனை கொடுப்பதற்கு வழி யேற்படுத்தவேண்டும். இந்தியாவின் நாணயத்தில் மதிப்பு இருந்து வரவேண்டுமானுல் ரிசர்வ் பாங்கி ஏற்பட்டு விடவேண்டுமென்று நாங்கள் நினைக்கிறோம். கூடிய சீக்கிரத்தில் இந்த ரிசர்வ் பாங்கி ஏற்பட்டுவேலையை ஆரம்பித்துவிடும்படி செய்ய நாங்கள் அவசியமான எல்லா நடவடிக்கைகளையும் காலதாமத மன்னியில் எடுத்துக்கொள்ளுகிறோம்.

### தேச பாதுகாப்பு.

தேச பாதுகாப்பு விஷயமாகப் பேசுகையில் பாதுகாப்பு சம்பந்தமான செலவு விஷயம் சட்டசபை அங்கீகாரத்திற் குட்பட்டதாக விருக்கக்கூடாதென்று எல்லைப்புற பாதுகாப்பைப் பொறுத்தமட்டில் அது அரசரின் ஏகதேச அதிகாரத்திற்குட்பட்டிருக்குமென்றும் கூறினர். தேசபாதுகாப்பு மெம்பரை நியமிப்பதில் கவர்னஜனாலுக்கு முழு அதிகாரம் இருக்கவேண்டும். சமஷ்டி வரவு செலவுதிட்டம் சட்டசபையில் ஆஜர் செய்யுமுன்னர் பொக்கிஷ மந்திரியும், முதல் மந்திரியும் கலந்தாலோசித்து தங்கள் அபிப்பிராயத்தை கவர்னர் ஜனாலுக்கு அறிவிக்க சந்தர்ப்பம் அளிக்கப்படும். இராணுவத்தை இந்திய மயமாக்குவதற்கு ஏற்பாடு செய்வது சட்டபூர்வமாக விரிவான பொருள் கொடுக்காமற் போய்விடும். கவர்னர் ஜனரலுடைய ஆக்ஞையில் இவற்றைக் குறிப்பிடுவதால் அந்த கோரிக்கையை நிறைவேற்றுவோம்.

### கவர்னர் ஜெனாலுக்குக் குறிப்புகள்,

"கவர்னர் ஜெனாலுக்கு அளிக்கப்போகும் குறிப்புகளைச் சட்டத்தில் பிரஸ்தாபிக்க உத்தேசிக்கிறோம். அதன்பிறகு இந்த புதுவிதமான முறையை பார்லிமெண்டு அங்கீகரிக்கவேண்டுமென்று நாங்கள் கேட்டுக்கொள்ளப்போகிறோம். தற்காலமுள்ள நிலைமைக்கு இந்த முறைதான் சரியானதாக விருக்கும். குறிப்புகள் மன்னர்பிரானின் அங்கீகாரத்தைப் பெறுமுன் பார்லிமெண்டு சபைகள் அவைகளைப்பற்றி அபிப்பிராயங் கூற சந்தர்ப்ப மளிக்கப்படும். அதன் மூலம் இக்குறிப்புகளுக்கு சட்டத்தின் அதிகாரமும் அமைப்பும் ஏற்படும். அரசியல் சட்டத்தில் இவைகளைப்பற்றி பிரஸ்தாபிக்கப்படுகிறபடியாலும் பார்லிமெண்டின் அங்கீகாரம் கோரப்படு மாகையாலும் இவைகளுக்கு இந்த அந்தஸ்து ஏற்பட்டு விடும்.

கூட்டுக்கமிட்டி ஆலோசனையின் போது காலியாகவிருக்கும் நாற்காலிகளைக் காண வேண்டுமென்று நான் உத்தேசிக்கவில்லை. நேற்றிரவு ஸர் ஸாப்ரு கூறியவைகளை நான் கவனத்துடன் ஆலோசிக்கிறேன். இன்று காலையே நான் முடிவாக எனது அபிப்பிராயத்தை வெளியிட வேண்டுமென்று அவர் கருதுவதாக நான் நம்பவில்லை. ஆனால் நல்லெண்ணத்தின் ருஜுக்களை நான் உணர்ந்திருக்கிறேன் என்று நான் இப்பொழுது தெரிவித்துக் கொள்கிறேன். அதற்கான அறிகுறிகள் இந்தியாவிலும் சில சந்தர்ப்பங்களில் காட்டப்பட்டிருக்கிறது. ஸர்வகக்ஷி மகாநாட்டு விவாதங்களின்போதும் அது ஏராளமாக வெளியாகியிருக்கிறது.



## கங்கா ஸ்நானமும் குடந்தை மாமாங்கமும்.

### கங்கா ஸ்நான மகிமை,

பாரத நாட்டில் சிறந்த நதி கங்கா நதியாகும். இந்நதி மகா புண்ணியமானது. பாபங்களை எல்லாம் அகற்றவல்லது என்று பக்தர்கள் கூறுகின்றார்கள். கங்காநதிக்கரையிலிருக்கும் காசி க்ஷேத்திரத்தையும் அதில் வீற்றிருக்கும் காசி விஸ்வநாதரையும் தரிசனம் செய்வதால் ஜன்மசாபல்யமாகும் என்பது ஆஸ்திகர்கள் கொள்கை. கங்கா நதி உயர்ந்த பெருமையுடைத்தாயிருக்கின்றது; அந்நீரிலாடுவதால்—ஸ்நானம் செய்வதால்—பலவிதநோய்கள் அகலும் என்று சயன்ஸ் நிபுணர்களும் நவில்கின்றார்கள். இவ்வாறுஇதர மதத்தினரும் கங்கையாற்றின் பெருமையைப் பாராட்டி அதன் கரையில் புகழ்பெற்ற பழய நகரங்களைக் கண்ணுற வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தி வருகின்றார்கள்.

### இலகுவான வழி,

இத்தகைய பெருமைவாய்ந்த இடங்களை நீங்கள் பார்க்க விரும்புகின்றீர்களா? நீங்கள் விரும்பின் அதற்கு இலகுவான வழியிருக்கிறது கல்லுக்கட்டி வடகரையிலிருக்கும் "விஸ்வநாதன் அண் கம்பெனி"யார் வேண்டிய உதவி செய்யுதத் தயாராக விருக்கிறார்கள்.

மிக சௌகரியமாக இரண்டாவது வகுப்பில் செல்லவேண்டுமாயின் ரூ. ௨௪0 வேண்டும். சாதாரண மூன்றாவது வகுப்புப் போதுமாயின் ரூ.௧௨0 தான்தேவை. பாதையில் உங்களுக்கு வைத்திய உதவிசெய்ய ஓர் தேர்ச்சிபெற்ற வைத்தியர் கூடவே இருப்பார். உங்கள் சாமான்களைப் பாதுகாக்கவும் ஆட்கள் உண்டு.

தங்கும் ஒவ்வொரு ஊரிலும் சொந்த சமையல் செய்து கொள்ளவேண்டுமென்ற கட்டாயமில்லை. ஓர் போஜன வண்டியும் ஸ்பெஷல் ரயிலில் சேர்க்கப்பட்டிருப்பதால் வண்டியிலேயே உங்களுக்குச் சாப்பாடு கிடைக்கும். நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை சாப்பாடு இரண்டுவேளை பலகாரம் உட்பட பூரா பிரயாணத்திற்கும் ரூ. ௯0 தான் தேவை.

### நகரத்தாருக்கு வசதி,

தனவணிகச் செல்வர்கள் வசதியை முன்னிட்டுள்ள இந்த ஸ்பெஷல் ரயிலுக்கு "நகரத்தார் ஸ்பெஷல்" என்று பெயர். ஆங்கீரச தை ௪-ம் நாள் இந்த ஸ்பெஷல் மதுரையிலிருந்து புறப்பட்டு முக்கிய நகரங்கள் வழியாகச் சென்று மகா சிவாத்திரியாகிய மாசி ௧௧-தேதியன்று ஸ்ரீ காசியில் சென்றுசேரும். அங்கிருந்து புறப்பட்டு கயா, கல்கத்தா, ஜகந்நாதம் முதலிய புண்ய நகரங்களில் தங்கி கும்பகோண மகாமகமாகிய மாசி ௨௭-ம் தேதி கும்பகோணம் வந்துசேரும். மிகுதியான விபரம் அறியவிரும்புவோர் "விஸ்வநாதம் கம்பெனி C/o S. R. அண் கோ. கல்லுக்கட்டி, காரைக்குடி என்ற விலாசத்திற்கு எழுதிப்பெற்று கொள்ளலாம்.

## பர்மா சட்டசபை.

### பிரிவினைக் கட்சியின் தோல்வி.

#### சட்டசபைத் தலைவர்

ஊ. சட்டசபைத் தலைவராக விருந்த திரு ஊ. பெ லொங் மீது கண்டனத்தீர்மானம் வந்ததால் அவர் ராஜினாமா செய்து விட்டார். பின்னர் சர் ஓஸ்கார் டி கிளான் வில்லி தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

#### பிரிவினை எதிர்ப்புத் தீர்மானம்

ஊ தா கியா பிரதம மந்திரி அறிக்கையில் வெளியிட்டுள்ளபடி யுள்ள பர்மாப் பிரிவினையை எதிர்ப்பதாகவும், நிபந்தனை யின்றி இந்தியா சமஷ்டியில் சேருவதை எதிர்ப்பதாகவும் ஓர் தீர்மானம் கொண்டு வந்தார். இதற்கு ஊ ராம் ரி மாங் மாங் ஓர் திருத்தம் கொண்டுவந்தார். அதில் பர்மாவிற்கு முழுதியான அதிகாரம் கொடுப்பது வரை பர்மாவைப் பிரித்தலாகா தென்றும் அல்லது நிபந்தனைகளுட்பட்டு இந்தியா சமஷ்டியில் சேர்ந்து கொள்ளுவ தென்றும் ஓர் திருத்தம் கொண்டு வந்தார். இந்த தீர்மானம் நிறைவேறியது.

#### பிரிவினைக் கட்சியார் தோல்வி

ஊ. பா. பீ. "பர்மாவைப் பிரித்துவிட வேண்டுமென்றும் பிரித்தவுடன் சிறந்த அரசியல் அமைப்பை பர்மாவிற்கு அளிக்க வேண்டும் என்றும் பர்மாவின் அரசியல் அமைப்பை நிர்ணயிக்க ஓர் பிரதிநிதித்துவ மகாநாடு கூட்டவேண்டுமென்றும் ஓர் திருத்தம் கொண்டு வந்தார். இத்தீர்மானத்தைக் கொண்டுவந்தவர் வாபீஸ் வாங்கிக்கொள்ள பின்னர் அனுமதி கேட்டார். அது அனுமதிக்கப்படவில்லை. எனவே, ஓட்டுக்குவிடப்பட்டபோது சார்பாக கூக-பேரும் பாதகமாக சச-பேரும் ஓட்டுக் கொடுத்ததால் தீர்மானம் தோல்வியுற்றது.

பிரிவினையைப்பற்றி பர்மா சட்டசபையில் ஆறு பகலும் இரண்டு இரவும் தொடர்ந்து விவாதங்கள் நடைபெற்றன.

#### பர்மாவின் புதிய கவர்னர்.

பழைய கவர்னர் சர். சார்லஸ் இன்னிஸ் ஸ்தானத்தில் சர். ஹியூ ஸ்டீபன்சன் பர்மா கவர்னர் வேலையை டிசம்பர் உகூ-ம் தேதி முதல் ஒப்புக்கொண்டார்.

## ஒற்றுமை மகாநாடு.

ஒற்றுமை மகாநாட்டின் சப் கமிட்டிக் கூட்டத்தில் ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. மகாநாடு உச-ம்தேதி பண்டித மாளவியாஜி தலைமையில் ஆரம்பமாயிற்று. அப்பொழுது பல சமூகத்தினரிடையும் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டதை மிக மகிழ்ச்சியுடன் மாளவியாஜி அறிவித்தார்.

சப் கமிட்டித் தீர்மானத்தின் சுருக்கம் வருமாறு:—

(க) இந்தியா மத்திய அரசாங்கத்தின் பொருளாதாரம், ராணுவம், வெளிநாடுகளோடுள்ள ஒப்பந்தம் யாவும் அடங்கிய அதிகாரம் முழுவதும் பொதுஜனங்களிடம் மாற்றவேண்டும்.

(உ) பேச்சுச் சுதந்தரம், மொழி, மதக் கோட்பாடு முதலியவைபற்றி உரிமையின் பொருள் இன்னதென்று தெளிவுபடுத்தப்பட்டது. இதற்காக ஓர் கமிட்டி ஏற்படுத்தப்பட்டுள்ளது.

(ஈ) எல்லா ஜனங்களும் சரிசமானர்கள். ஜாதி-மதம் ஆண்-பெண் வேற்றுமையின்றி எல்லோர் உயிருக்கும் பொருளுக்கும் முழு பாதுகாப்பும் அரசாங்கம் அளித்தல் வேண்டும். எல்லோருக்கும் கிணறு, குளம், பாதைகள், பொது ஸ்தாபனங்கள் ஆகியவற்றை உபயோகிக்கும் உரிமையுண்டு.

(ச) சில நிபந்தனைகளுக்குட்பட்டு எல்லாருக்கும் ஆயுதம் வைத்துக்கொள்ளும் உரிமையுண்டு.

(ரு) மத்திய அரசாங்கத்தின் மொழி ஹிந்துஸ்தானியாகவே இருக்கும். ஹிந்தி உருது எழுத்துக்கள் உபயோகிக்கலாம்.

(சு) ஒவ்வொரு மாகாணத்திலும் அந்தந்த மாகாணத்தின் தாய்மொழியையே பின்பற்ற வேண்டும்.

(எ) மத்திய சட்டசபையின் பிரதிநிதித்துவம் வருமாறு:—முஸ்லீம்கள் நூற்றுக்கு கூஉ, சீக்கியர் சஉ, இந்தியக் கிறிஸ்தவர்கள் உ, ஆங்கிலோ இந்தியருக்கும் ஐரோப்பியருக்கும் சேர்ந்து க.

(அ) ராணுவத்தில் எவ்வித வித்தியாசமுமின்றி எல்லா ஜாதியினரும் அனுமதிக்கப்படுவார்கள். ஆனால், ராணுவ உணர்ச்சி கொண்டவர்களுக்கு விசேஷ உரிமையுண்டு.

(கு) அரசாங்க உத்தியோகத்திலும் எவ்வித ஜாதி-மத வேற்றுமையின்றி எல்லோரும் சேருவதற்கு உரிமையுண்டு.

(க0) நவம்பர் மாதத்தில் ஏற்படுத்தப்பட்ட போதத் தொகுதியே ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால், பார்சிகளை, யூதர்கள் பேரும் லிஸ்டில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

(கக) வங்காள சம்பந்தமாக நவம்பர் தீர்மானமே இருக்கிறது. ஆயினும் இது கல்கத்தாவில் கூடவிருக்கும் கூட்டத்திலேயே கடைசியாக முடிவு செய்யப்படும்.

(கஉ) பஞ்சாப சட்டசபையில், முஸ்லீம்களுக்கு நூற்றுக்கு ருக-ம, சீக்கியர்களுக்கு உ0-ம், ஹிந்துக்களுக்கு உஎ-ம், இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு கூ-ம், ஐரோப்பியர் ஆங்கிலோ இந்தியர்களுக்கு க வீதம் ஸ்தானங்கள் அளிக்கப்படும்.

(கஙு) புதிய சிந்து திட்டமும் பெரும்பாலும் முன் இருந்தபடியே இருக்கும்.

இவை சப் கமிட்டியார் முடிவு செய்ததை மகாநாடு ஒப்புக்கொண்டது. பின்னர் பர்மா சட்டசபையில் பிரிவினை வேண்டாம் என்ற தீர்மானம் நிறைவேறியதற்காகப் பாராட்டுத் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

## தேவகோட்டை.

### விரிசலாறு பாலத்திறப்பு.

தேவகோட்டையிலுள்ள விரிசலாற்றுப் பாலம் டிசம்பர் உகூ-ம் தேதி காலை ராமநாதபுரம் ராஜா ஷண்முக ராஜேஸ்வர சேதுபதியவர்களால் திறந்துவைக்கப்பட்டது. அத்தருணம் ஏராளமான ஜனங்கள் விஜயஞ் செய்திருந்தார்கள்.

#### பாலத்தின் வரலாறு.

விரசலாற்றுப்பாலம் கட்ட ரூ. கசுகசCO செலவாகியிருக்கிறது. இச்செலவில் பாதி அரசாங்கத்திலிருந்தும் பாதி ஜில்லாபோர்டிலிருந்தும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனைக்கட்ட ககஉஎ-லேயே திட்டம் போடப்பட்டதாயினும் ககஙுக ஆகஸ்டில் தான் வேலை ஆரம்பமாயிற்று. எனவே, பால வேலை பதினாலுமாதங்களுக்குள் முடிவாகி யிருக்கிறது. இப்பாலம் தேவகோட்டையை இராமநாதபுரம், சருகணி, சிவகங்கை, தொண்டி ஆகிய இடங்களோடு இணைக்கிறது. இப்பொழுது இப்பாலத்திலிருந்து போடப்படும் வழியாக ராமநாதபுரம் சஉ-மைல் தூரத்தில்தான் இருக்கிறது. இதனைக் கட்டுவதற்குக் காலஞ்சென்ற திரு. அள. அரு. நாராயணன் செட்டியாரும் முதன் மந்திரியாகவிருந்த சுப்பராயனும் முயற்சி எடுத்திருந்தது மிகவும் பாராட்டத்தக்கது. இப்பாலத்திற்கு ராமநாதபுரம் ராஜா பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.





### ஸ்ரீ பாதசங்கருக்குத் தடை.

சென்னை ஸ்ரீ பாதசங்கர் அவர்களை பம்பாய் போலீஸ் தலைமை ஆபீசில் பிடித்து வைத்திருந்து பின்னர் உச-மணி நேரத்திற்குள் பம்பாயை விட்டு அகலவேண்டுமென ஓர் உத்தரவு போலீஸ் கமிஷனரால் சார்தா செய்யப்பட்டது.

* * *

### டில்லியில் மறியல்.

டில்லியிலுள்ள சீமை ஜவுளிக்கடைகளை மறியல் செய்ததற்காக இரண்டு தொண்டர்கள் கைது செய்யப்பட்டார்.

* * *

### சுபாஷ்பாபு தேகநிலை.

சுபாஷ் சந்திரபோஸ் டிசம்பர் உஉ-ம் நாள் காலை லட்சுமணபுரி மெடிகல் காலேஜில் ராய்பகதூர் ரகுநாதலால் அவர்களால் எக்ஸ்ரே சோதனை செய்யப்பட்டார். பின்னர் பலராம்புர் ஆசுபத்திரிக்குக் கொண்டு போகப்பட்டார். விரைவில் ஓர் மெடிகல் போர்டாரால் சுபாஷ் பாபுவின் உடல் சோதனை செய்யப்படுமென்று தெரிகிறது.

* * *

### லாகூர் மாணவருக்கு ஒரு வருடம்.

பஞ்சாப் மாணவர் சங்கத்தலைவரும் எம். ஏ. வகுப்பு மாணவருமான திரு ஆதம்பர் காஷ் இராஜத்துவேஷ சம்பந்தமான பிரசங்கம் புரிந்ததற்காக ரூபா ௫000 ஜாமீன் கொடுக்கவேண்டுமென்றும் இன்றேல் ஒரு வருடகாவல் தண்டனை யடையவேண்டும் என்றும்லாகூர் மாஜிஸ்திரேட்கூறினர்.எதிரி ஜாமீன் கொடுக்க மறுத்ததால் சிறைத்தண்டனை அடையப்பெற்றார். இவருக்கு மாஜிஸ்திரேட் பி. வகுப்பு சிபார்சு செய்தார்.

* * *

### பம்பாய் சமாசார் ஆசிரியருக்கு தண்டனை.

பம்பாயிலிருந்து வெளியிடப்படும் "பம்பாய் சமாசார்" எனும் குஜராத்தி தினசரி பத்திரிகையின் ஆசிரியர் காட்கோபாரிலுள்ள கள்ளுக்கடை மறியல் சம்பந்தமான ஓர் கட்டுரை வெளியிட்டதற்காக ரூ. ௬00 அபராதம் விதிக்கப்பட்டார்.

* * *

### பிரீபிரஸ் ஜாமீன் தொகை அப்பீல்.

பம்பாய் பிரீபிரஸ் ஜர்னல் காந்தியடிகளின் பழைய கட்டுரை ஒன்றை வெளியிட்டதற்காக அப்பத்திரிகையின் ஜாமீன்தொகை ரூ. க0,000 இரண்டு மாதங்களுக்கு முன் அரசாங்கத்தாரால் பறிமுதல் செய்யப்பட்டது. இது தவறு என்றும், கட்டுரை, அவசர அச்சுச்சட்ட விதிகள்படி குற்றமாகாதென்றும் ஆதலால் அந்த ஆர்டரை ரத்து செய்யவேண்டுமென்றும் பம்பாய் ஹைக்கோர்ட்டில் பிரீபிரஸ் ஜர்னல் சார்பாக மனுக்கொடுக்கப்பட்டிருக்கிறது.

* * *

### கைதுசெய்து விடுதலையானார்கள்.

கல்விக்கோட்டை பலகாரக்கடை வீதியிலிருந்து சீமைத்துணிக் கடையில் திரு சே. சேகரன் நாயர், கே. பாலகிருஷ்ணன் நாயர் ஆகியோர் மறியல் செய்தனர். இவ்வாறு பாளையம் ரோட்டிலுள்ள மற்றொரு கடையும் மறியல் செய்யப்பட்டது. இவர்களை போலீசார் கைதுசெய்து உச-மணி நேரம் லாக்கப்பில் வைத்திருந்து பின்னர் விடுதலை செய்தார்கள்.

## சட்டமறுப்பு இயக்கம்.

### திரு. முருகப்படையாச்சி விடுதலை.

திருச்சிச் சிறையிலிருந்த திரு. முருகப்படையாச்சி வயிற்றுக்கடுப்பால் மிகவும் கஷ்டப்பட்டார் இவர் டிசம்பர் கரு-ம் தேதி எவ்வித நிபந்தனையுமின்றி திருச்சியிலிருந்து விடுதலை செய்யப்பட்டு தற்பொழுது டாக்டர் ராஜன் ஆசுபத்திரியில் சிகிச்சையிலிருக்கிறார்.

* * *

### திரு. பி. கே. டட் உடல்நிலை.

சட்டசபை வெடிக்குண்டு வழக்கு சம்பந்தப்பட்ட திரு பி. கே. டட் உடல்நிலை சரியாக வில்லாததால் திருச்சி சென்ட்ரல் சிறையிலிருந்து டிஸ்டிரிக் ஆசுபத்திரிக்கு மாற்றப்பட்டுள்ளார். அவர் வயிற்றுக்கடுப்பு சம்பந்தமாகக் கஷ்டப்படுவதாகத் தெரிகிறது.

* * *

### ராமுண்ணிமேனனுக்கு ஒரு வருடம்.

கல்லிக்கோட்டையில் சோள தினத்தைக் கொண்டாடும் பொருட்டு திரு டி. என். ராமுண்ணி மேனன் தலைமையில் ககச-தொண்டர்கள் ஊர்வலமாகச் சென்றார்கள். அவர்கள் கைதுசெய்யப்பட்டு, சப் டிவிஷனில் மாஜிஸ்திரேட்டுமுன் விசாரணைக்குக் கொண்டுவந்தபொழுது திரு மேனன் ஒரு வருட கடுங்காவலும், அச்சுத வாரியர் என்பவர் தவிரவுள்ள இதர தொண்டர்கள் ஒவ்வொருவரும் மூன்றுமாத தண்டனையும் விதிக்கப்பட்டார்கள். அச்சுத வாரியர் மன்னிப்புக் கேட்டதால் விடுதலை செய்யப்பட்டார்.

* * *

### கோயமுத்தூர்.

கோயமுத்தூரைச் சார்ந்த சத்திய மங்கலத்தில் நான்கு காங்கிரஸ் காரர்கள் மறியல் செய்ததற்காகவும் சட்டமறுப்பு சம்பந்தமான துண்டுப் பிரசுரங்கள் வினியோகம் செய்ததற்காகவும் கைது செய்யப்பட்டார்கள்.

* * *

### கண்ணனூர் சிறை நிலைமை.

மலயாளத்திலுள்ள கண்ணனூர் சிறையில் புதிய ஜெயிலரும் சூப்பிரண்டும் வந்தது முதல் அரசியல் கைதிகள் மிகவும் கஷ்டப்படுவதாகத் தெரிகிறது. சமீபத்தில் அச்சிறையிலிருந்து விடுதலைபெற்ற திரு. கிருஷ்ணன் நாயர் பத்திரிகைகளுக்கு வெளியிட்டுள்ள செய்தியால் கீழ்க்கண்ட விஷயங்கள் வெளியாகின்றன. அரசியல் கைதிகள் முன்னர் தங்கள் சொந்தச் செலவில் சோப்பு, எண்ணெய், புத்தகங்கள் முதலியன உபயோகித்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். தற்பொழுது அவை தடுக்கப்பட்டுவிட்டன. அடிக்கடி அரசியல் கைதிகளுக்கு சவுக்கடி கொடுப்பதோடு விலங்குகளும் போடப்படுகின்றன. உடல் நிலை சம்பந்தமாக சிலருக்கு மிகியடிகள் அனுமதிக்கப்பட்டிருந்தன. அவை இப்பொழுது தடுக்கப்பட்டுவிட்டன. உணவு மிகவும்மோசம். ஆதலால், சிலர் உண்ணாவிரதம் இருக்கநேர்ந்தது. சாப்பாட்டிற்கும் குளிப்பதற்கும் வார்டர்கள் காவலோடு சிறு சிறு கூட்டமாகவே அனுப்பப்படுகிறார்கள். இதர சமயங்களில் பகலிலும் கூடபிளாக்கினுள் போட்டு பூட்டப்படுகிறார்கள். ஆனால் சாதாரண கைதிகள் பகலில் பூட்டப்படுவதில்லை. அரசியல் கைதிகள் நிலை சரிப்படுவது வரை பி. கேசவன் நாயர், இ. சி. அப்புநம்பியார் ஆகிய இருவரும் உண்ணாவிரதமிருந்து வருகிறார்கள்.

* * *

### காலேஜில் புரட்சி வாசகங்கள்.

சிட்டகாங் கவண்மெண்ட் காலேஜ் சுவர்களிலும் வகுப்புகளிலும் புரட்சிசம்பந்தப்பட்ட வாசகங்கள், சித்திரங்கள் முதலியன அடிக்கடி எழுதப்படுகின்றனவாம். இதனைத்தடுக்க தலைமை ஆசிரியர் எவ்வளவோ முயன்றும் அவற்றை எழுதுபவரைக்கண்டு பிடிக்கமுடிய வில்லையாம். ஆதலால் தற்பொழுது அந்த கலாசாலை தலைமை யாசிரியர் மாணவர்களுக்கு ஓர் எச்சரிக்கை கொடுத்துள்ளார். அதன்படி புரட்சி சம்பந்தமான வாசகங்கள்—சித்திரங்கள் முதலியன திரும்பவும் எழுதப்படின் காலேஜிலுள்ள மாணவர்கள் யாவரும் ஆளொன்றுக்கு மூன்று ரூபாய் வீதம் அபராதம் கொடுக்க வேண்டுமென்றும், இதுவும் பலிக்காவிடின் காலேஜை மூட அரசாங்கத்திற்கு சிபார்சு செய்யப்படுமென்றும் தெரிகிறது.

* * *

### நீதிஸ்தலத்தில் காங்கிரஸ் தொண்டர்.

ஜபல்பூர் டெப்டி கமிஷனர் கோர்ட்டிக் ஓர் காங்கிரஸ் தொண்டர் மெதுவாகச் சென்று நீதிபதி ஆசனத்தில் கம்பீரமாக விருந்துகொண்டும் தேசியக் கொடியை வீசிக்கொண்டும் கையெழுத்துப்போடவேண்டியவற்றை தன்னிடம் கொடுக்கும்படி பெஞ்சு கிளார்க்கிடம் கேட்டாராம். உடனே அவர் கைதுசெய்யப்பட்டார். பின்னர் மற்றொரு தொண்டர் அந்த கோர்ட்டில் பறந்துகொண்டிருக்கும் யூனிவன்ஜாக் கொடியை அப்புறப்படுத்த முயன்றபொழுது கைது செய்யப்பட்டார். இவர்களுக்கு தலா ஆறுமாதத் தண்டனை விதிக்கப்பட்டதாம். ஆனால் பெயர் இன்னதென்றுகூற அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

* * *

### எல்லைப்புற வெடிக்குண்டு வழக்கு.

எல்லைப்புற மெயில்வண்டி வெடிக்குண்டு வழக்கு சம்பந்தமாக சென்ற ஏப்ரல் கசு-ம் தேதி கைது செய்யப்பட்ட ரகுநாத், பிகாரிலால், பூமிதார் ஆகியோர்மீது தொடுக்கப்பட்டுள்ள வழக்கில் பெஷவார் செஷன் ஜட்ஜ் டிசம்பர் உகூ-உ தீர்ப்புக் கூறினர். அத்தீர்ப்பின்படி எதிரிகள் யாவரும் விடுதலை செய்யப்பட்டார்கள்.

* * *

### திரு சுப்பிரமணிஐயர் மரணம்.

திருநெல்வேலியில் காங்கரஸ், தீண்டாமை ஆகிய விஷயங்கள்பற்றி பிரசாரம் செய்துவந்த திரு பி. சுப்பிரமணி ஐயரவர்கள் திடீரென்று மாரடைப்பால் மரணமடைந்தார்.

### மயக்கம்.

பண்டிதர் (சட்டை ஜேபியில் கையை நுழைத்துக்கொண்டு):-ஆஹா! என் பணப்பையைக் காணோம்.

பண்டிதர் சம்சாரம்:— ஜேபியில் பிறர் கைநுழைந்தது தெரியவில்லையா?

பண்டிதர்:—காலையில் ஒரு கை நுழைந்தது தெரிந்தது. ஆனால், அது என் கையென்று நினைத்துச் சும்மாவிருந்துவிட்டேன்.

ஃ ஃ ஃ

### எப்பொழுது?

எஜமானி:—சீதா, காலையில் யாரோ ஒருவனைத் தோட்டத்தில் முத்தமிட்டுக்கொண்டிருந்தாயே அது யார்? தபாற்காரனா? பாற்காரனா?

வேலைக்காரி சீதை:—உம்,—மன்னிக்கவேண்டுமம்மா? யோசித்துச் சொல்லுகிறேன். அது எப்பொழுது? ஏழு மணிக்கா? எட்டு மணிக்கா?

ஃ ஃ ஃ

### செப்படுவித்தை.

செப்படுவித்தைக்காரன் (கூட்டத்தில் ஒரு கனவானை நோக்கி):—உங்கள் பாக்கெட் கடிகாரத்தைக் கொடுங்கள். அதைக் காணமற்போகச் செய்து திரும்பத் தருவழைக்கிறேன்.

கனவான் (சந்தோஷமாக):—நேற்றுக்காலே அதைக் காணமற் போக்கிவிட்டேன். நீ திரும்ப வரவழைப்பது மாத்திரம் போதும்.

### ஜில்லாக் கமிட்டிக் கூட்டம்.

காரைக்குடி ஜில்லா தீண்டாமை விலக்குக் கமிட்டியின் கூட்டம் சென்ற வெள்ளிக்கிழமை மாலை ௫ மணிக்கு மரு. சு. கட்டிட மேல் மாடியிலுள்ள கொப்புடையம்மன் கோவில் ரிசீவர் ஆபீசில் தலைவர் திரு எ. ரெங்கசாமி ஐயங்கார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நிறைவேறிய தீர்மானங்கள் வருமாறு:—

காரைக்குடி ஜில்லா தீண்டாமை விலக்குக்கமிட்டியின் காரியதரிசிகளாக திருவாளர்களான ஜி. ஆர். பாண்டியன், கே. ஆர். ராமசாமி ஆகிய இருவரும் நியமிக்கப் பட்டார்கள்.

(2) ஜில்லாக் கமிட்டியின் தலைமை ஆபீஸ் தற்காலிகமாக தேவகோட்டையில் இருக்க வேண்டும் என்றும் ஆனால் திரு. ஜி. ஆர். பாண்டியன் காரைக்குடியையே தலைமை ஸ்தானமாகக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப் பட்டது.

(3) பாவனக்கோட்டை, பரமக்குடி ஆகிய கிராமங்களில் ௧௮-௧௨-௩௨-ல் யன்று கூடு. ஹரிஜனங்கள் கிருஸ்தவர்களாக்கப் பட்டதற்கு இக்கமிட்டி வருந்துவதோடு ஹரிஜனங்களின் கஷ்டத்தை கவர்ந்தது அவர்களை முன்னேற்றத்திற்குக் கொண்டுவர இக்கமிட்டி முன் வந்திருப்பதால் இப்போது இருக்கும் கஷ்டங்களுக்குப் பயந்து மதம் மாறவேண்டாம் என்றும் அவர்களுக்கு வேண்டிய உதவி செய்யத் தயார் என்றும் இககமிட்டி உறுதி கூறுகிறது.

(4) கமிட்டித் தலைவர், திரு ஆர். வி. சாமிநாதன், பாகனேரி சி. உ. சுப. உடையப்பா, திரு எஸ். லெட்சுமிநாதன் பாரதி, திரு ராம. சொக்கலிங்கன் ஆகியோர் எழுவன்கோட்டை தாலூகாவிலுள்ள கிராமங்களுக்கு நேரில் சென்று ஹரிஜனங்களையும் மற்றவர்களையும் கலந்து மதம் மாறுதலைத் தடுப்பதற்கான வேலைகளைச் செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறது.

சிவகங்கை, மானாமதுரை, தேவகோட்டை ஆகிய இடங்களில் தீண்டாமை விலக்குத் தினம் கொண்டாடியதற்கு ரூ-௧௦- வீதம் கொடுப்பதென்று தீர்மானிக்கப் பட்டது. (நமது நிருபர்)

### காரைக்குடி ஜில்லாவில்

# தீண்டாமை விலக்கு.

மதமாற்றத்தைத் தடுக்க ஏற்பாடு.

**சிவகெங்கை**

டிசம்பர் ௧௮ந் தேதி இவ்வூரில் அகில இந்திய தீண்டாமை விலக்கு தினம் வெகு விமரிசையாய்க் கொண்டாடப்பட்டது. மாலையில் அரண்மனைவாசல் முன்பாக ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் ஆயிரம் ஜனங்களுக்குமேல் கூடி இருந்தார்கள். தேசபக்தர் திரு. ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் தலைமை வகித்தார். அவர் விழா கொண்டாடப்படுவதின் நோக்கத்தையும், தீண்டாமையை அடியோடு ஒழிக்கவேண்டியதின் அவசியத்தையும் வெகு விரிவாகக் குறிப்பிட்டுப் பேசினார். பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

குருவாயூர் ஆலயத்தில் ஜாதி இந்துக்களுக்குள்ள உரிமையைப்போல ஹரிஜனங்களும் கோவிலுக்குச் சென்று சுவாமியை வணங்கும்படியான நியாயமான உரிமையை ௧௯௩௩ வருஷம் ஜனவரி முதல் தேதிக்குள் வழங்கும்படி இந்தப் பொதுக் கூட்டம் கள்ளிக்கோட்டை சாமுதிரியை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது.

இந்தத் தீர்மானத்தை தூத்துக்குடி வக்கீலும் பெருங் கிழவருமான அறிஞர் திரு. எஸ். வி. விஸ்வநாத அய்யர் அவர்களால், பிரரேபிக்கப்பட்டு, சிவகெங்கை வக்கீல் எஸ். கிருஷ்ணசாமி அய்யர் (பி. எ. பி.எல்.) அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏக மனதாக நிறைவேறியது.

(2) சிவகெங்கை ஜமீனில் உள்ள ஜாதி இந்துக்களுக்குரிய கோவில் பிரவேச முதலிய சகல உரிமைகளையும் ஹரிஜனங்களும் அடையவேண்டியது நியாயமும், அவசியமுமென்று இந்தக் கூட்டம் தீர்மானிப்பதுடன் மேற்படி உரிமைகளை ஹரிஜனங்களுக்கு உடனே வழங்கும்படி ஜாதி இந்துக்களைக் கேட்டுக்கொள்கின்றது. மேலும் சிவகெங்கை ஜமீனில் உள்ள கோவில்களுக்குள் ஹரிஜனங்களை அனுமதிக்கும்படி சிவகெங்கை சமஸ்தான ஆலயங்களின் சொந்தக்காரரும் பரம்பரை டிரஸ்டியுமான சிவகெங்கை மகாராஜா அவர்களையும் கேட்டுக்கொள்கிறது.

இந்தத் தீர்மானம் இராமனாதபுரம் ஜில்லா போர்டு மெம்பர் திரு. சி. உ. சுப. உடையப்பா அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு தமிழறிஞரும மதுரை வக்கீலுமான திரு. சோமசுந்தர பாரதி யவர்கள் புதல்வரும் தேவகோட்டை வக்கீலுமான திரு. லக்ஷ்மிரதன் பாரதி எம். எ. பி. எல். அவர்களால் ஆமோதிக்கப் பட்டு ஏகமனதாக நிறைவேறியது. பாரதி யவர்கள் பிரசங்கம் பொது ஜனங்களுக்கு மிகுந்த உற்சாகத்தை [illegible].

(௩) இந்தியா சட்டசபையில் திரு. சி. எஸ். ரங்கய்யர், ராவ்பகதூர் எம். சி. ராஜா முதலியவர்களாலும் சென்னை சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் அவர்களாலும் கொண்டுவரப் பட்டிருக்கும் ஆலயப்பிரவேச சம்பந்தமான மசோதாக்களை இந்தப் பொதுக் கூட்டம் மனப்பூர்வமாக ஆதரிப்பதுடன் மேற்படி மசோதாக்களை ஏகமனதாக நிறைவேற்றி வைக்கும்படி சட்டசபை மெம்பர்களைக் கேட்டுக் கொள்கின்றது.

இந்தத் தீர்மானம் சிவகங்கை வக்கீல் திரு. வி. சுந்தரவியாஸ் பி. எ. பி. யல். அவர்களால் பிரரேபிக்கப்பட்டு வக்கீல் திரு. யம். ஜி. குருசாமி அய்யர் யம். எ. பி. எல். அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது.

பின்னர் தலைவர் முடிவுரையின் பின்னர் திரு. கே. மீனாட்சிசுந்தரன் அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பட்டு கூட்டம் இனிது முடிவுற்றது. (ஒரு நிருபர்)

### ஒரு வேண்டுகோள்.

திரு. பொ. திருகூடசுந்தரம் எம். எ. பி. எல். நாகர்கோவிலிலிருந்து எழுதுவதாவது.

நமது "ஊழியன்" தேச நலத்திற்காக இடைவிடாது உழைப்பதே தன் வாழ்வின் லட்சியமாகக் கொண்டவன் என்பதை நன்கு அறிவீர்கள். அவ்விதம் அன்னையின் பணியில் ஈடுபட்டதன் பயனாக ஆண்டு ஒன்றுக்குச் சிறைவாசம் பெறும் பாக்கியம் அடைந்தான். இப்பொழுது முன்போல் உழைக்க சிறையிலிருந்து வெளிவந்துளான். தொண்டொன்றே பெரிதாகக் கொள்ளும் தூய பெரியோனாகிய ஊழியனுக்கு சகல வழிகளிலும் ஆதரவு அளிப்பது நமது கடன்.

நற்சமயம் தீண்டாமை என்னும் கறையை நமது பழம் பெரும் ஹிந்துமதத்தினின்றும் அகற்றி தேசத்திற்கும் அதன் மூலம் அகில லோகத்திற்கும் நன்மைதேட மகாத்மா காந்தியடிகள் கச்சைகட்டி முனைந்து நிற்கின்றார். நாம் தீண்டாமையை அகற்றிவிடாவிடில் அவரை இழக்கநேரும். ஆனால் அவர் உயிர் யாவராலும் விலை மதிக்க முடியாதது [illegible] லவா?

அதனால் உடனே நீங்கள் அனைவரும் இது விஷயமாய் சிரத்தை எடுத்துக்கொள்ளுதல் அவசியமும் அவசரமுமான விஷயம். உடனே செய்யவேண்டியதொன்று உண்டு. ஊர் ஊராய்க் கூட்டம் கூட்டி ஜாதி இந்துக்கள் என்போர் குருவாயூர் கோயிலை ஹரிஜனங்கட்குத் திறந்துவிடும்படி அக்கோயில் தர்மகர்த்தா அவர்களை வேண்டிக்கொள்ளவேண்டும்.

தீண்டாமை விலக்கு விஷயமாய் நமது ஊழியன் தீவிரமாய் உழைப்பான் என்பதும், செட்டி நாட்டினின்று அதை ஓட்டியேதீர்வான் என்பதும் அதை ஓட்டித் தீரும் வரை அவன் சும்மா இருக்கப்போவதில்லை என்பதும் என் திட்டமான நம்பிக்கை. அது போலவே அவனுடைய முயற்சிகள் பலன் காட்டவேண்டுமானால் உங்கள் ஆதரவு முழுவதும் தேவை என்பதும் என் திடமான நம்பிக்கை. அத்தகைய ஆதரவை அளிப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். வந்தேமாதரம்.

**நாட்டரசன்கோட்டை**

இவ்வூர் பாரதி வாசகசாலையில் இம் மார்கழித் தங்கள் முதல் நாள் தாலுகாபோர்டு டாக்டர் ராஜா ராம் பாரதி அவர்கள் தலைமையில் ஓர் கூட்டம் கூடப் பெற்றது. அவ்வமயம் திருவாளர்கள் சுப. மு. கண்ணப்பா, குப. ஷ். ரெங்கனாதச் செட்டியார் ராம. சொக்கலிங்கன், சோம. லெட்சுமணன் முறையே, வாசகசாலையின் பயன், கல்வி, நட்பு, ஆராய்ச்சி, யென்பதுபற்றி கேட்டோர் மனம் இன்புறும் வண்ணம் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். அப்பால் தலைவர்களால் முடிவுரை கூறப்பெற்று சந்தனம் பன்னீர் வழங்கி கூட்டம் இனிது கலைந்தது யென ஒரு நிருபர் யெழுதுகிறார்.









உலகத்தையே பொருளாதார நெருக்கடி பிடித்து வாட்டுகின்றது. மேனாட்டு மக்கள் போர் வெறிகொண்டு அலைகின்றனர். கீழ்நாட்டு மக்கள் வறுமைக்கு அடிமைகளாகி வாழ்க்கையை நடத்த முடியாது தவிக்கின்றனர். உலகத்தின் எதிர்காலம் நம்பிக்கையற்றதாகவேயிருக்கின்றது. அடிமை இந்தியாவில், தினந்தோறும் பட்டினிக் கொடுமையால் பத்துபேர்கட்குமேல் உயிர்விடுகின்றனர். ஆசிரியா பி. சி. ரே. கூறுவதுபோல, பட்டதாரிகளின் மதிப்பு மோருக்கும் மிளகு ரசத்துக்கும் தாழ்வாகவேயிருக்கிறது. உலகத்திலுள்ள மக்கள் அதிக துன்பங்களை அனுபவிக்கும்பொழுது செட்டியார் சமூகத்தினராகிய சிறுபான்மையோரும் அனுபவிக்க நேருவது இயல்பே.

மற்றவர்களைவிட செட்டியார்கள் அதிகமான துன்பங்களை அனுபவிக்கின்றனர். அதற்குக் காரணம் அவர்கள் தங்கள் வாழ்க்கையை ஒரே துறையில் அமைந்திருப்பதுதான். இதனாலேயே எதிர்பார்த்ததற்கு மேலாகத் துன்பப்படுகின்றனர். இதுகாறும் ஆடம்பரச்செலவில் மூழ்கியிருந்த நம்மவர்கட்குச் சிக்கன வாழ்க்கையை மேற்கொள்வது சிரமமாகவே தோன்றும். எனினும் உலகெலாம் சிக்கன முரசு, பேரொலி செய்யும் இக்காலத்தில், அவ்வொலியை நாமும் கேட்டு, சிக்கனத்தை கையாண்டு வாழ்க்கை நடத்தக் கடமைப்பட்டுள்ளோம். இன்றேல் நமது எதிர்காலத்தைக் குறித்து நாம் கனவிலும் கருத முடியாது.

செட்டியார்களின் வருங்கால வாழ்க்கையும், பர்மாவின் வருங்கால வாழ்க்கையும் ஒன்றென்று கூறினால் மிகையாகாது. எனது நண்பரொருவர், "பர்மாவே செட்டியார்கள், செட்டியார்களே பர்மா" என்று கூறினார். மற்றொரு நண்பர் (The chettiars are the Virtual Rulers of Burma) அதாவது "செட்டியார்களே நியாயமான உண்மையான பர்மாவின் அரசர்கள்" என்று கூறினார். இவ்விருவர் கூற்றிலும் உண்மை பொதிந்திருக்கின்றது. என்றே நான் கருதுகின்றேன் என்று

# செட்டியார்கள் எதிர்காலம்.

( திரு. அ. கருப்பன் செட்டியார், கோட்டையூர். )

லும், செட்டியார்களின் உரிமைகளும், முதலும் அரசாங்கத்தாரால் பாதுகாக்கப்பட வேண்டிய நிலையில் இருக்கின்றன.

பர்மாவில் இன்றைய தினம் செட்டியார் சமூகத்தினர் தாங்கள் உரிமைகளை பூரணமாக அனுபவிக்காததின் முக்கிய காரணம், அவர்களிடத்துள்ள ஓர் பெருங் குறையேயாகும். பொதுவாக செட்டியார் தங்கள் சம்பந்தப்பட்ட விஷயம் தவிர அரசியல் விவகாரங்களில் தலையிடாது தனித்து நிற்கும் தன்மையாளர்கள். ஆனால் இத்தகைய முறையை விட்டொழித்து, பர்மாவின் அரசியல் வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் அதிக கவனம் செலுத்தி, மற்ற இந்தியர்களோடும் பர்மியர்களோடும் நட்புரிமை கொண்டு தோளோடு தோள் பிணைத்து நின்று வேலைசெய்யவேண்டிய காலம் நெருங்கிவிட்டது.

பர்மாவில் சென்ற ஒரு நூற்றாண்டாக தேசத்தின் உயிர்நாடியான பாங்கித் தொழிலைச் சில முறைகளில் வெள்ளையர்களை விட அருமையாகவும் நடத்தி வந்த—நடத்திவருகிற—நடத்திவரப்போகிற செட்டியார்கட்கு இதுகாறும் சட்டசபையில் எவ்வித ஸ்தானங்களும் அளிக்கப்படாதிருந்தது மிகவும் வருந்தத்தக்கதாகும். சென்ற சில மாதங்கட்கு முன் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக் காரியதரிசி, பர்மா கவர்னரை செட்டியார்கட்கு இரண்டு ஸ்தானங்கள் கொடுக்கும்படி விண்ணப்பம் செய்திருந்தார்.

ஆனால் பர்மாக் கவர்னருக்கு ஒரு ஸ்தானம் கொடுக்கத்தான் மனம் வந்தது போலும். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்தியாவை ஆளத் தொடங்கி ௧௫௦ வருடங்களாகியும், இது வரையில் ஒன்று கேட்டு இரண்டு கொடுத்ததாக எங்கும் கேள்விப் பட்டதாகவே கிடையாது. ஆனால் பத்து விஷயங்கள் கேட்டு ஒன்று கூடபூர்த்தியாகாத சந்தர்ப்பங்கள் பல உண்டு. செட்டியார்கள் சங்கப் பிரதிநிதியாக குறைந்தது இருபது அங்கத்தினர்கள் சட்டசபையில் இடம் பெற உரிமையும் நியாயமும் உண்டு. காரியதரிசி அவர்கள் குறைந்தது பத்து ஸ்தானங்கள் வேண்டுமென்று கேட்டிருந்தால், ஒரு வேளை கவர்னர் இரண்டு மூன்று ஸ்தானங்கள் கொடுப்பாரோ என்னவோ?

ஆனால் கவர்னரின் நியமனத்தைப் பொறுத்தவரையில் அவரைப்பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். நாற்காலியை அலங்கரிக்கும் அங்கத்தினரை நியமிக்காது, கீழ்நாடுகளில் பூரண அனுபவம் பெற்றவரும், வாக்கு வன்மை நிறைந்தவரும், இளமையின் பிரதிநிதியுமான ஓர் இளைஞரை நியமித்ததைக் குறித்து மட்டற்ற மகிழ்ச்சி யடைகின்றேன். ஸ்ரீ வெள்ளையன் செட்டியாரின் நியமனத்தை, இளமையின் நியமனமாகவே கருதுகின்றோம். வருங்கால உலகத்தை ஆள்வது இளமையே யன்றோ!

சமீபத்தில் செட்டியார் சங்கத்தினர் ஸ்ரீ வெள்ளையன் செட்டியாருக்கு விருந்தளித்தனர். அப்பொழுது அவர் பேசியுள்ள உரைகள் இளைஞர்கள் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியுமென்பதில் ஐயமில்லை.

"இதுகாறும் நாம் வெளிநாட்டு இராஜீய விஷயங்களில் புகுந்ததில்லை. இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான சந்தர்ப்பத்தில் நாம் தகுந்த முயற்சியுடனும், எச்சரிக்கையுடனும் இல்லாதிருப்பின் நமது சமூகத்தார்கள் இங்கு நீண்டகாலம் இருப்பதற்கு ஏதுவில்லை. எதிர்கால ராஜீய விஷயங்களில் நாம் கலந்துகொள்ள வேண்டும். நமது நிலங்களையும் பொறுப்பு வாய்ந்த வியாபார ஸ்தலங்களையும் இங்கு வைத்துக்கொண்டு மௌனம் சாதித்துக்கொண்டிருப்பது கூடாது."

என்று ஸ்ரீ வெள்ளையன் செட்டியார் நவின்றுள்ளார்.

அரசியல் வாழ்க்கையில் கலந்து கொள்ளாவிட்டால் நமக்கு பர்மாவில் இடமில்லை. எனினும் உண்மையை தைரியமாக வெளியிட்ட ஸ்ரீ செட்டியாரைப் பாராட்டுகின்றேன். அன்றியும் ஸ்ரீ செட்டியார் "ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு" என்னும் பாரதியாரின் கீதத்தை முழங்குகின்றார். ஸ்ரீ செட்டியார் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் உண்மையான குறைகளை நிவர்த்திசெய்யப் பின்வாங்கமாட்டார் என்றும் செட்டியார் சமூகத்தின் கௌரவத்தைப் பாது காத்தும் முறையில் நடந்துகொள்ளுவார் என்றும் நிச்சயமாய் நம்புகின்றேன்.

### ஹிந்து மகாசபை.

அகில இந்திய ஹிந்து மகாசபையானது ஹிந்து மதவளர்ச்சிக்காக உண்மையில் பாடுபடும் உயரிய ஸ்தாபனமாகும். இதன் தலைமை ஸ்தானம் புதுடில்லி. இச்சங்கம் சென்ற பத்தாண்டுகளாக தீண்டாமை விலக்கிற்காக அரும்பாடுபட்டு வருகிறது. இப்பொழுது தீண்டாமை அநீதியை அடியோடு ஒழிக்கற்கு பெரும் முயற்சி எடுத்துளது.

Reg. No. M. 1509. (12 Pages.) Price O-1-6. Tel: "Oolian"

SUBSCRIPTIONS.

Annual subscription Rs. 5
Half yearly Rs. 3
Foreign Annual. Rs. 7

# ஊழியன்

ADVERTISEMENTS.

One Inch, S. C. per incertion As 8
Court Noties, per inch Rs 1
Long Standing Advertisements given concessions.

The "Oolian" a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol. XIII. Karaikudi—Wednesday 28th December 1932. No 2





ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" பவர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

